# தாயுமானசுவாமிகள்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு

உ

திருச்சிற்றம்பலம்.

# தாயுமானசுவாமிகள்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு.

இஃது

திருத்தணிகைச்

சரவணப்பெருமாளையரவர்களால்

முன்பதிப்பித்தபிரதிக்கிணங்கச்

சிதம்பரம்,

கருணாநந்தசுவாமிக

ளவர்களால்

பார்வையிடப்பட்டு,

சிந்தாத்திரிப்பேட்டையிலிருக்கும்

பிரபாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

௧௮௬௭ ௵.

உ

கடவுள் துணை.

## ...யுமான சுவாமிகளுடைய

மாணாக்கராகிய

அருளையரென்பவர்-அந்தச்சுவாமிகளைத் துதிசெய்த

அருள்வாக்கிய வகவல்.

---

திருவளர்கருணைச் சிவானந்தபூரண - மொருவருமறியாவொ
ருதனிச்சித்து - நவந்தருபேதமாய் நாடகநடித்துற் - பவந்தனை
நீக்கிப் பரிந்தருள்பராபரங் - கண்ணுங்கருத்துங் கதிரொளிபோல
நண்ணிடவெனக்கு நல்கியநன்மை - யொன்றாய்ப்பலவா யொப்பி
லாமோனக்- குன்றாய்நிறைந்த குணப்பெருங்குன்ற - மண்ணையும்
புனலையும் வளியையுங் கனலையும்-விண்ணையும் படைத்த வித்திலாவி
த்துப்- பந்தமனைத்தையும் பாழ்பட நூறியென்- சிந்தையுட்புகுந்த
செழுஞ்சுடர்ச்சோதி - விள்ளொணாஞானம் விளங்கியமேலோர்-
கொள்ளைகொண்டுண்ணக் குறைவிலாநிறைவு - தாட்டாமரைமலர்த்
தாணினைப்பவர்க்குக் - காட்டாவின்பங்காட்டியகதிநிலை - வாக்கான்
மனத்தான் மதித்திடவரிதென - நோக்காதிருக்க நோக்கியநோக்க-
மாதியாயறிவா யகண்டமாயகண்ட - சோதியாய்விரிந்து துலங்கிய
தோற்றம் - பரவெளிதன்னிற்பதிந்தவென் னுளத்தின் - விரவிவிரவி
மேற்கொளும் வெள்ளஞ் - சுட்டுக்கடங்காச் சோதியடியார்-மட்
டுக்கடங்கும் வான்பெருங்கருணை - யெல்லைக்கடங்கா வேகப்பெரு
வெளி-தில்லைப்பொதுவிற் றிருநடத்தெய்வம் - வாதவூரெந்தையை
வரிசையாய்விழுங்கும் - போதவூர்மேவுகர்ப் பூரவிளக்குச் - சுகனை
யகண்டத் தூவெளியெல்லாந் - திகழவேகாட்டுஞ் சின்மயசாக்ஷி-
செழுந்தமிழப்பரைச் சிவலிங்கமாக்கி- விழுங்கிய ஞான வித்தகவே
ழ- மெழிற்றருபட்டினத் திறைவனையென்று- மழிவிலாவிலிங்க மாக்
கியவனுதி - சாந்தபூமி தண்ணருள்வெள்ள- மார்ந்தநீழ லசையாக்க
னம்-பரவுவார்நெஞ்சிற் பரவியமாட்சி- யிரவுபகலற்றவேகாந்தக்
காட்சி-யாட்சிபோலிருக்கு மகிலந்தனக்குச் - சாட்சியாயிருக்குந்
தாரகத்தனிமுத- லாணும்பெண் ணுமலியுமல்லாததோர்- தானுவா
ய்நின்றசத்தாந்தனிச்சுட - ரொள்ளுமெண்ணையு மெய்ப்படியப்படி-
புள்ளும்புறம்பு மூலாவியவொருபொரு- ளளவிலாமதந்தொறு ம
வரவர்பொருளென - வுளநிறைந்திருக்குமொருபொற்பணிதி - து
ள்ளுமனப்பேய் துடிக்கத்தறிக்கக்- கொள்ளுமோனவாள் கொடுத்
திடிமரசு- பெரியபேறுபேசாப்பெருமை- யரியவுரிமை-யளவிலா
வளவு- துரியநிறைவு தோன்றாவதீதம்- விரியுநல்லன்பு விளைத்திடும்
விளைவு-தீராப்பிணியாஞ் செனனமறுக்க - வாராவரவாய் வந்தசஞ்
சீவி- யாலைக்கரும்புபா கமுதக்கட்டிநீள்- சோலைக்கனியலாச்சுளைக

தலிக்கனி- பாங்குறுமாங்கனி பாலேல்சருக்கரை- மீ[illegible]கண்
டுசேர்த் தொன்றாய்க்கூட்டி-யருந்தியரசமென வறி[illegible] மாதியிற்-
பொருந்தியவின்பம் பொழிசிற்சுகோதய-[illegible]றைந்த விய
ல்பினையெனக்குச் - செங்கையால்விளங்கத் தெரிந்தமெய்த்தேசிக
ன்- றன்னையறிவித்துத் தற்பரமாகி-யென்னுளத்திருந்தரு ளேகநா
யக - னடிமுடியில்லா வரும்பொருடனக்கு- முடியடியிதுவென
மொழிந்திடு முதல்வன் - மெய்யலான்மற்றவை மெய்யலவெல்லா
ம் - பொய்யெனவறியெனப் புன்னகைபுரிந்தோ - னருளும்பொ
ருளு மபேதமாயிருந்து-மிருதிறனென்னுமியலுமுண்டென்றோ-
னருளுனக்குண்டே லருளும்வெளிப்படும் - பொருண்மயந்தா
னே பொருந்துமென்றுரைத்தோன் - சத்தசத்திரண்டு தன்மையுந்
தானே - யொத்தலாற்சதசத் தனக்கெனவுரைத்தோ - னாணவமறு
விடி னருளுருதென்னக் - காணருநேர்மையாற் காணவேயுரைத்
தோன் - சென்மமுள்ளளவுந் தீராதிழுக்கும் - கன்மம்விடாதெனக்
காட்டியவள்ள - லுளதிலதெனவு முறுதலான்மாயை - வளமிலதெ
னவும் வகுத்தினிதுரைத்தோ - னில்லறத்திருந்து மிதயமடக்கிய-
வல்லவன்றானேமகாயோகியென்றோன் - துறவறத்திருந்துஞ் சூழ்
மனக்குரங்கொன் - றறவகையறியா னஞ்ஞானியென்றோ - னிறவா
மனந்தா னிறக்கவுணர்த்திப்- பிறவாவரந்தரும் பேரறிவாள- னத்த
னதருளாலனைத்தையுமியக்குஞ் - சுத்தமாமாயையின் தோற்றமெ
ன்றுரைத்தோ- னிருண்மலமகலவிசைந்ததிலழுத்தும்- பொருளரு
ட்டிரோதைப் பொற்பெனப் புகன்றோன் - வீறுசிவமுதல் விளம்
பியபடியே- யாறுமனுதியென்றறிஞருக்குரைப்போன் - கொல்லா
விரதங்குவலயத்தோர்க - ளெல்லாம்பெறுமினென் றியம்பியதயா
நிதி-தருமமுந்தானமுந் தவமும்புரிபவர்க்-குரிமையாயவரோடுறவு
கலப்பவன் - றன்னுயிர்போலத் தரணியின்மருவிய- மன்னுயிரனை
த்தையும் வளர்த்திடும்வேந்தன் - களவுவஞ்சனைகள்செய் கருமிகட
மக்குந் - தெளிவுவந்துறவருள் செய்திடுந்திறத்தோன் - றன்பெ
றும்பேறு சகமெலாம்பெறவே - வான்பெருங்கருணை வழங்கிய
மாரி- தஞ்சமென்றடைந்த தாபதர்தம்மை- யஞ்சலென்றருளு மறி
ஞர்சிகாமணி - சீவகோடிகளுஞ்சித்தர்கோடிகளும் - யாவரும்புக
ழ யாவையுமுணர்ந்தோன் - யானெனதென்னா விறைவனெம்பெ
ருமான் - ஞானவனாகிய தலைவனெங்கோமா- னருணகிரியார்க் காறு
முகன்[illegible]னும்-பொருணலமல்லது பொருளெனமதியான் - பூத
முதலாப் பொலிந்திடுநாத-பேதமுங்கடந்த பெருந்தகைமூர்த்தி-
மூலாதாரமுதலாயுள்ள- மேலாதாரமும் வெறுவெளிகண்டவன்- ம
ண்டலமூன்றிலு மன்னி[illegible]வுருவிலுங் - கண்டவையத்திலுங் கடவு
ளாய்நின்றோன் - பகர்சமயந்தொறும் பரமேயிருந்து - சுகநடம்

ரியுந் மெ... லெனச் சொன்னேன் - பேதவபேத பேதாபேத,
பாதமித... ப் புகன்றிடிப்புண்ணிய - னதுநானெனவே யாற்
டிமனுபவஞ் ...வேதாந்தத் தன்மையென்றுணாத்தோ - னல்
ம்பகலுமறிவானோர்க்குச் - சொல்லும்பொருளுஞ் சுமையெ
ச்சொன்னேன் - சுதனைகுருவாஞ் சுவாமிநாயகற்கெனி - னதி
மெய்ஞ்ஞான மல்லவோவென்றே - னேசயோகத்துறு நிருப
ல்லாந்தொழூ - மிராசயோகத்திறையிராசயோகத்தான் - பொ
மைதெளிவு புனிதவாசார - மறுவிலா வண்மை வாரமியற்கை-
ண்ணமர்சாந்தந் தயங்கியகீர்த்தி- யெண்ணென்கலைபயி லிணையி
க்கல்வி - நல்லவிரக்க நடுநிலைசத்திய - மில்லையென்னுமலெவர்க்
ந்தருங்கொடை - நற்குணமெல்லாநன்னியபெருந்தகை- சிற்
ணவாரி திருவருட்செல்வன் - கரமேலெடுத்துக் கருத்துறவண
கிப் - பரமேயுனக்குப் பரமெனப்பகர்ந்தோ - னுலடிமேவும
சிலையெடுத்தே - சீலமெய்ஞ்ஞானந்தெளிந்தனனென்னவுஞ்-சித்
மௌனிதிடசித்தபாக- வைத்தநிலையின்வளர்ந்தனனெனவு - மூல
மரபின்மூளைத்தமௌனிதன் - பாலன்யானெனவும்பரிவொடும்
கர்ந்தோன் - வடமொழியியற்கையின் மகிமையைபுணர்ந்து- தி
றமுப்பொருட் டிறத்தையுந்தெளிந்து - கண்டமுதென்னக்க
ரசமென்னத் - தண்டமிழ்மாரிதன்னைப்பொழிந்து- சித்தியுமுத்
யுஞ் சிறந்தருள்கொழிக்கு - நித்தியநிரஞ்சன நிராலம்பநிறைவை
-பாடியுநாடியும் பணிந்தெழுந்தன் பா - லாடியுமாற்றியு மகங்கு
ழவெய்திய - முடலங்குழையவுரோமஞ்சிலிர்ப்பப் - படபடெ
றுள்ளம் பதைத்துப்பதைத்துப் - பாங்குறுநெட்டுயிர்ப்பாகிப்
ரதவித் - தேங்கியேங்கியிரங்கியிரங்கி - யோய்ந்தபம்பரம்போ
லாடுங்கியேசிறிது - மேய்ந்தவிழிகளிமைப்பதுமின்றிச் - சோர்ந்
சோர்ந்து துவண்டுதுவண்டுமெய்- யார்ந்தவன்போ டவசமுற்
டிக்கடி - யுண்ணடுக்குறவேயுருகியேசற்றுத் - தண்ணமர்மொழி
ந்தழுதழுத்திடவே - யுள்ளும்புறம்புமொருமித்துருகி - வெள்ள
போல்விழிநீர்பெருக்கிக்- கன்றுபசுவைக்கருதிக்கதறிச்- சென்று
சன்றேடித்திகைப்பதுபோல - வென்புநெக்குடைய விருகரங்
வித்துப்- புன்புலால்யாக்கை பொருந்தாதினியென - வுணர்ந்து
ர்ந்தன்பாயுவகைமேற்கொண்டினிக் - கணம்பிரியேனெனக்கரு
யகுறித்துத் - திருவுருவெல்லாந்திருநீறிலங்க - விருகரநளினமி
ன்முடிகுவித்துப்- பூரணசந்திரன்போலொளிகாட்டுங் - காரண
னங் கவின்குறுவெயர்வுற - விளநிலாவெனவே யிலங்கிய சிறுந
க - தளதளவென்னத் தயங்கியெழில்பெற - வித்தன்மையெல்லா
சைந்துமிவனருட் - சித்தெனச்சிவகதிதேர்ந்தவருணைப்பப்- பா
ரமாடப்பரிவுடனுடிச் - சாத்திரங்காட்டித்தயவுசெய்தருளும்-

வல்லவனெனவே மன்னுயிர்காக - வெல்லையிலன்ப[illegible]வனென வி
ளங்கி- யினவுலகத்தியற்கைபொய்யென்றே - ஞா[illegible]மெய்யெ
ன னவின்றினிதிரங்கிக் - கேவலசகலங்கீழ்ப்[illegible]மேலாய்-மேவருஞ்
சுத்தமெய்யினைநல்க - வருளேயுருவுகொண்டவனியில்வந்த - பொ
ருளேயிவனெனப் பொலிந்திடும்புனிதன்- சைவஞ்சிவனுடன் சம்
பந்தமென்பது - மெய்வளர்ஞானம் விளக்குமென்றிசைத்தோன்-
கதிர்விழியொளியுறக்கலத்தல்சித்தாந்த - விதிமுறையாமெனவிளம்
பியமேலோன் - முடிவினிலாகமமுறைமையினுண்மையை- யடிய
ரைக்குறித்துரைத்தருளியவண்ணல் - சிதம்பரநேர்மைதிறமாவுரை
த்திறை - பதம்பரவெனப்பகர்பரமமெய்ஞ்ஞானி- முத்திபஞ்சாக்
கர முறைமையிலயிக்கியஞ் - சத்தியமிதுவெனச் சார்ந்தவர்க்கு
ரைத்தோ - னஞ்செழுத்துள்ளே யனைத்தையுங்காட்டியென்- னெ
ஞ்சழுத்தியகுருநீதிமாதவ - னெல்லாநிறைந்த விறைவன்செயலெ
னக் - கல்லாவெனக்குங்கருணைசெய்கடவுள் - குருவருளாலேகூடுவ
தல்லாற் - றிருவருளுறாதெனத் தெரிந்திடவுரைத்தோன்- குருவுரு
வருளெனக் கொண்டபின்குறையாய்ப் - பொருண்மயமாமெனப்
புகன்றிடுபோத - னைந்தமூர்த்திகளையுமெழிற்குருவடிவெனச்- சி
ந்தையிற்றியக்கறத் தேர்ந்தவர்க் குரைத்தோன் - சதாசிவமென்ற
பேர்தான்படைத்ததுதா - னதாவதேபொருளென் றெடுத்தெடு
த்துரைத்தோன் - கல்லானைகன்னல்கவர்ந்திடச்செய்தவ - னெல்லா
ம்வல்லசித்தெம்மிறையென்றோ - னெவ்வுயிர்தோறுமிறைமேவிய
திறஞ் - செவ்வியபிரம்படி செப்பிடுமென்றோ - னெவ்வணமெவ
ரெவரிசைத்தனரவரவர்க்-கவ்வணமாவனெம் மானெனவறைந்தோ,
னொருபாணனுக்கே யொருசிவனுட்படின் - வருமடியார்திறம் வ
ழுத்தொணாதென்றோன் - சிவனடியாரைச் சிவனெனக் காண்பவ,
னெவனவன்சிவனே யென்றெடுத்துரைத்தோன் - விருப்புவெறுப்
பினை வேரறப்பறித்துக்- கருப்புகாதென்னைக்காத்தருள்செய்தோ-
னிருசொல்லுரையா தியானின்பமெய்த - வொருசொல்லுரைத்த
வுயர்குணபூதர - னத்துவாமார்க்கமாறையுமகற்றி - தத்துவாதீதத்
தன்மையைத்தந்தோன் - திருமகண்மருவிய திகழ்வளமறைசையி
ல் - வருமுணர்வாளன் மருளிலாமனத்தா - னெண்ணிய வெண்ண
மெல் லாந்தெரிந்தெனக்குத்- தண்ணருள்செய்தவன் றாயுமானவ;
னொருமொழிபகர்ந்த வுதவியாலவன்ற- னிருபதமுப்போதிறைஞ்
சிவாழ்த்துவனே ... ... ... ... *

---

அருள்வாக்கியவகவல்

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# தாயுமானசுவாமிகளது
## சரித்திரச்சுருக்கம்.

தென்னாடுகள் பலவற்றினுஞ்சிறந்து விளங்குகின்றசோழமண்டலத்திலேஉள்ளவேதாரணியமென்னும் வடமொழிப்பெயரையுடைய திருமறைக்காடாகிய சிவஸ்தலத்திலே சற்றேறக்குறைய-ஈஎ௦ வருஷத்துக்கு முன்பாகவேளாண்குலதிலகராயும், குருலிங்க சங்கம பத்தியிலே சிறந்தவராயும், கேடிலியப்பபிள்ளையென்பவரொருவர் இருந்தார். அவராலே அந்தசிவஸ்தல விசாரணைநடத்தப்பட்டுக்கொண்டிருந்தது. அக்காலத்திலே திரிசிரபுரத்திலே அரசாட்சிசெய்துக்கொண்டிருந்த விஜயரகுநாத சொக்கலிங்க நாயகரென்பவர், கேடிலியப்பப் பிள்ளையினுடைய நற்குணங்களையும், கணக்குவல்லமையையும், சிலர்சொல்லக்கேட்டு அவரை அழைப்பித்துப்பரீக்ஷித்து அவருக்குப் பெரியசம்பிரதி யுத்தியோகங் கொடுத்துத் தம்மிடத்தே வைத்துக்கொண்டார். அந்தக்கேடிலியப்பப் பிள்ளையானவர் சந்ததியில்லாதவராயிருந்த தமையனருக்குத் தம்முடைய ஒரே,பேறாகியசிவசிதம்பரபிள்ளையென்னுங்குமாரனைக்கொடுத்து விட்டிருந்ததினால்தமக்குச் சந்ததிஉண்டாக அருள்செய்யும்படிக்கு அந்தத்திரிசிரபுரத்திலெழுந்தருளியிருக்கின்ற தாயுமானேசுரரைத் தரிசித்துக்கொண்டுவந்தார் அந்தக்கடவுளது திருவருளினாலே ஓராண்பிள்ளை பிறந்தது. அதுகண்டு தகப்பனார் மகிழ்கூர்ந்து அக்கடவுளுக்குக் காணிக்கைமுதலானவைசெலுத்திக்குமாரனுக்குத்தாயுமானவரென்கிற அக்கடவுளது பெயரைக்கொடுத்தார் அந்த தாயுமானவர்தன்தகப்பனாருக்குமிகவும்மனமகிழ்ச்சியுண்டாகும்படிக்கு அவர்செய்யுமுயற்சியளவிற்குஅதிகமான கீர்வாணந்-தமிழ்-முதலியகல்விப்பயற்சியிலேசிறந்தவரானார். உண்மை-அன்பு-பொறுமை- அடக்கம்-இரக்கம்-இவைமுதலிய நற்குணங்களெல்லாம் அவரோடுகூடவே வளர்ந்தனஓர்- அஞ்ஞானியினதுமனமானது நிலையில்லாத செல்வப்பொருளை எப்படிவிரும்புமோஅப்படியே இவரது மனமானது- தத்துவப்பொருளையேவிரும்பிநின்றது. அப்படியிருக்கையில், திருமூலநாயனார் மரபிலே எழுந்தருளியமௌனதேசிகர் தாயுமானவரைச் சந்தித்து அவரது அதிதீவரபக்குவத்தைக்கண்டுவேதாகமங்களின்முடிவான தத்துவப்பொருளைஉபதேசித்தருளினர். அதுமுதலாகத்தாயுமானவர் தமது ஞானாசாரியரிடத்தே மிகுந்தபத்தி உடையவராய் அவ்வுபதேசப்பொருளைச்சிந்தித்துத் தெளிந்துதினந்தோறும் தக்ஷிணாமூர்த்தி சன்னிதியிலேநிஷ்டைசெ

ய்துக்கொண்டுவந்தார். பின்பு தாயுமானவருக்குத்தக்க ஞானதே சிகர் யோகத்தை அடைதலினாலே அவரது லௌகிகத்தொழிலை அரசனது வேண்டுதல்பற்றி அதில் விருப்பமில்லாதவரா யிருந்தும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. அரசனானவன் அவரை முதலிலே ஞானவானென்று அறிந்திலனாகினும் கேடிலியப்பப் பிள்ளையினும் இவர்யோக்கியரென்று நன்குமதித்துமிகவுஞ் சிறப்புச்செய்துவைத்திருந்தான். ஆனால்கழைக்கூத்தனுடைய கருத்துஉடல்காப்பிலும் அவனது செய்கை கூத்திலும் எப்படி வைக்கப்பட்டிருக்குமோ அப்படியே தாயுமானவரது கருத்துச் சிவத்திலும்அவரதுசெய்கை லௌகிகத்திலும் வைக்கப்பட்டிருந்தன. இப்படிக்குச் சிலநாள்கள்சென்றபின்மேல் அரசன் அவரிடத்தே விளங்கிய அபூர்வமான சிலசெய்கைகளைக்கண்டு அவரது மகிமையை அறிந்துகொண்டான் - உடனே விவேகியாகிய அவ்வரசனுக்கு அவரைக்குறித்து அச்சமும்-அன்பும் - உண்டாதலால் அவரையழைப்பித்துஉயர்ந்த ஆசனத்தின்மேல் இருந்தருளப்பண்ணி சுவாமீ அடியேன் இதுவரையிலே உமது மகிமையைக்கண்டு கொள்ளமாட்டாதவனா யிருந்ததனாலே உமக்கு ஊழியஞ்செய்யத்தக்க நான் உம்மை எனது ஊழியத்திலே வைத்திருந்தேன்.ஆயினும்,இதுபெரியகுற்றமாகலின் கிருபா மூர்த்தியாகிய தேவரீர் இக்குற்றத்தைப்பொறுத்தருளி இன்றுமுதலாக அடியேனால் ஆகவேண்டிய வற்றைச் செய்வித்துக்கொண்டு நிஷ்டைக்குக் குறைவுபடாமல்இருந்தருளலாமென்று வேண்டுதல் செய்தான். அதுகேட்டவுடனே தாயுமானவர் திருவுளமகிழ்ந்து அன்றுமுதலாக அளவற்றஞானயோகத்திலேஇருந்துகொண்டு கடவுளையும், குருவையும்- அற்புத சின்மயமதுரமான தமிழ்ச்செம்பாடல்களைப்பாடித் துதிசெய்துகொண்டுவந்தார். இப்படியிருக்கையில் அவ்வரசன் இறந்துபோய்விட்டான்.அவ்வரசன்மனைவிதாயுமானவரது திருமேனியின் கண்ணேயுள்ள அழகைக் கேள்விப்பட்டு அவரை அழைப்பித்துக் கண்களிகூர நோக்கிக் கேள்விப்பட்டவளவினும் அதிகமாய் விளங்குதலால் உளமருண்டு அவரைத்தன்னரசாட்சிக்குத் தலைவராக்கவும் தன்னால் விரும்பப்பட்ட தகாதசெய்கைக்கு உடன்படுத்தவும் தான் கொண்டகருத்தைக் குறிப்பித்தாள் - அக்கருத்தை அறிந்ததாயுமானவரோவென்றால் உடனே ஒருபாய வழியினாலே அங்கிருந்துதம்மைவிடுவித்துக்கொண்டு அவள் அரசாட்சியி னெல்லையைக் கடந்து இராம நாதபுரத்துச் சீமைக்கு எழுந்தருளினார் இது செய்தி சிவசிதம்பர பிள்ளையின் செவியை அடைந்ததனாலே அவரும்சிறியதாய் குமாரராகிய அருணாசலப்பிள்ளையும் தேடிகண்டுபிடித்துச் சந்ததிவிளங்க வேண்டுமென்னுங் கருத்தைக்கொண்டு திருக்கல்யா

ணஞ்செய்யும்படி முயற்சிசெய்தார்கள்- தாயுமானசுவாமிகளுக்கு அதுகாரியத்திலே சிறிதும் திருவுளமில்லாதிருந்தும் தமையனாரது வேண்டுதலின் மிகுதியினாலே உடன்பட வேண்டியதாயிற்று. உடனே பத்தினியார் ஓராண்பிள்ளையைப் பெற்றுவைத்துச் சிவபதம் அடைந்தார். அந்தப் பிள்ளைக்குக் கனகசபாபதி பிள்ளையென்று பெயர்இடப்பட்டது. அதுமுதலாகத் தாயுமானசுவாமிகள் கௌபீனத்தோடு பரிசுத்தசிவஸ்தலந்தோறும் சஞ்சரித்துக்கொண்டுஇவ்வுலகத்திலுள்ள மனிதர்களெல்லாம் மெய்ஞ்ஞான ஒளியைப்பெற்று அஞ்ஞானவிருளினின்று நீங்கி உய்யுப்படிக்குப் பல்வகைப்பட்ட அற்புதமான பாடல்களைச் செய்தருளினர் அருளையரென்பவரும் அவரிடத்தேதத்துவோபதேசம் பெற்றுக்கொண்டு அவரைவிட்டுநீங்காமல் பணிவிடைசெய்துகொண்டுவந்தார்.

தாயுமானசுவாமிகள் அகண்டபரிபூரண சச்சிதானந்தசொரூபமாகிய சிவத்திலே கலந்தபின்பு அருளையசுவாமிகள் அகவற்பாவினாலே குருவைத்துதித்துச் சிவயோகத்திலேயிருந்து தமக்குப்பின் பக்குவப்பட்டுவரும் அடியார்களுக்கு அனுக்கிரகஞ்செய்யும்படி ஷ்ஷ கனகசபாபதிப்பிள்ளைக்கு அபிஷேகஞ்செய்தருளினர்.

இக்குருபரம்பரையில் தஞ்சைமாநகரத்துக்குக் கீழ்பால்அன்னப்பன்பேட்டையிலுள்ள மடத்தில் இப்போது இருக்கின்ற அப்பலவாணசுவாமிகளுடைய அடியார்கூட்டத்திலே ஒருவராகியும் அந்தஆதீனத்துக்கு உரியவராகியும் உள்ளஎடுத்துக்கட்டி அருணசலநாயனாரவர்களிடத்திலிருந்தஆதீனபுஸ்தகத்தையும் மற்றுஞ்சிலபுஸ்தகங்களையும் திருத்தணிகைச் சரவணப்பெருமாளைய ரவர்கள் அழைப்பித்து ஒப்பிட்டு அச்சிற் பதிப்பித்தனர்.

---

தாயுமான சுவாமிகளுடைய சரித்திரம்

முற்றுப்பெற்றது.

# நூலினுட்பிரிவு.



நூலினுட்பிரிவுமுற்றிற்று.



உ

கடவுள்துணை.

# தாயுமானசுவாமிகள்பாடல்.

## திருவருள்விலாசப்பரசிவவணக்கம்.

### ஆசிரியவிருத்தம்.

அங்கிங்கெனாதபடியெங்கும்ப்ரகாசமா ... ... ...*
யானந்தபூர்த்தியாகி ... ... ... ... *
யருளொடுநிறைந்ததெதுதன்னருள்வெளிக்குளே ... ...*
யகிலாண்டகோடியெல்லாந் ... ... ... *
தங்கும்படிக்கிச்சைவைத்துயிர்க்குயிராய்த் ... ... ...*
தழைத்ததெதுமனவாக்கினிற் ... ... ... *
றட்டாமனின்றதெதுசமயகோடிகளெலாந் ... ... ...*
தந்தெய்வமெந்தெய்வமென் ... ... ... *
றெங்குந்தொடர்ந்தெதிர்வழக்கிடவுநின்றதெது ... ...*
வெங்கணும்பெருவழக்கா... ... ... ... *
யாதினும்வல்லவொருசித்தாகியின்பமா ... ... *
யென்றைக்குமுள்ளதெதுமேற்... ... ... *
கங்குல்பகலறநின்றவெல்லையுளதெதுவது ... ... *
கருத்திற்கிசைந்ததுவே ... ... ...*
கண்டனவெலாமோனவுருவெளியதாகவுங்... ... *
கருதியஞ்சலிசெய்குவாம் ... ... ...(க)

ஊரனந்தம்பெற்றபேரனந்தஞ்சுற்று... ... ...*
முறவனந்தம்வினையினா ... ... ... *
லுடலனந்தஞ்செயும்வினையனந்தங்கருத் .. ... *
தோவனந்தம்பெற்றபேர் ... ... ...*
சீரனந்தஞ்சொர்க்கநரகமுமனந்தநற் ... ... *
றெய்வமுமனந்தபேதந் ... ... ... *
திகழ்கின்றசமயமுமனந்தமதனால்ஞான ... ...*
சித்தியாலுணர்ந்து ... ... ... *
காரணந்தங்கோடிவருஷித்ததெனவன்பர் ... ... *
கண்ணும்விண்ணுந்தேக்கவே ... ... ... *
கருதரியவானந்தமழைபொழியுமுகிலைநங் ... ... *
கடவுளைத்துரியவடிவைப்... ... ... ... ... ...*

பேரனந்தம்பேசிமறையனந்தஞ்சொலும் ... *
பெரியமௌனத்தின்வைப்பைப் ... ... ... *
பேசருமனந்தபதஞானவானந்தமாம் ... ... ... *
பெரியபொருளைப்பணிகுவாம் ... ...(உ)

அத்துவிதவத்துவைச்சொற்ப்ரகாசத்தனியை ... *
யருமறைகண்முரசறையவே ... ... ... *
யறிவினுக்கறிவாகியானந்தமயமான ... ... ...*
வாதியையனாதியேக ... ... ... ... ... *
தத்துவசொரூபத்தைமதசம்மதம்பெறாச் ... ... ...*
சாலம்பரகிதமான ... ... ... *
சாசுவதபுட்கலநிராலம்பவாலம்ப ... ... ... *
சாந்தபதவ்யோமநிலையை ... ... *
நித்தநிர்மலசகிதநிஷ்ப்ரபஞ்சப்பொருளை .. .. *
நிர்விஷயசுத்தமான ... ... ... ...*
நிர்விகாரத்தைத்தடத்தமாய்நின்றொளிர் ... ... *
நிரஞ்சனநிராமயத்தைச் ... ... ... ... *
சித்தமறியாதபடிசித்தத்திநின்றிலகு ... ... ... *
திவ்யதேசோமயத்தை ... ... *
சிற்பரவெளிக்குள்வளர்தற்பரமதானபர ... ... *
தேவதையையஞ்சலிசெய்வாம் ... ... (௩)

திருவருள்விலாசப்பரசிவவணக்க முற்றிற்று.



## பரிபூரணானந்தம்.

வா சாகயிங்கரியமன்றியொருசாதன ... ... *
மனோவாயுநிற்கும்வண்ணம் ... ... ...*
வாலாயமாகவும்பழகியறியேன்றுறவு ... ... *
மார்க்கத்தினிச்சைபோல ... ... ...*
நேசானுசாரியாய்விவகரிப்பேனந்த ... ... *
நினைவையுமறந்தபோது ... ... ...*
நித்திரைகொள்வேன்றேகநீங்குமெனவெண்ணிலோ ... *
நெஞ்சந்துடித்தயருவேன் ... ... *
பேசாசவானந்தநிட்டைக்குமறிவிலாப் ... ... *
பேதைக்கும்வெகுதூரமே ... ... ...*
பேய்க்குணமறிந்திந்தநாய்க்குமொருவழிபெரிய... ... *
பேரின்பநிட்டையருள்வாய் ... ... ...*
பாசாடவிக்குளேசெல்லாதவர்க்கருள் ... ... *
பழுத்தொழுகுதேவதருவே ... ... ... *

பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... *
பரிபூரணாநந்தமே .. ... ... (௧)

தெரிவாகவூர்வனநடப்பனபறப்பன ... *
செயற்கொண்டிருப்பனமுதற் ... ... *
றேகங்களத்தனையுமோகங்கொள்பௌதிகஞ் ... *
சென்மித்தவாங்கிறக்கும் ... *
விரிவாயபூதங்களொன்றோடொன்றாயழிவு ... *
மேற்கொண்டசேடமதுவே ... *
வெறுவெளிநிராலம்பநிறைசூன்யமுபசாந்த ... *
வேதவேதாந்தஞானம் ... ... *
பிரியாதபேரொளிபிறக்கின்றவருளருட் ... *
பேற்றோர்கள்பெற்றபெருமை ... *
பிறவாமையென்றைக்குமிறவாமையாய்வந்து ... *
பேசாமையாகுமௌனமே ... *
பரிவாயெனக்குநீயறிவிக்கவந்ததே ... ... *
பரிபாககாலமலவோ ... ... *
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... *
பரிபூரணாநந்தமே ... (௨)

ஆராயும்வேளையிற்பிரமாதியாலு ... *
மையவொருசெயலுமில்லை ... *
யமைதியொடுபேசாதபெருமைபெருகுணசந்திர ... *
ராமெனவிருந்தபேரு ... *
நேராகவொருகோபமொருவேளைவரவந்த ... *
நிறைவொன்றுமில்லாமலே ... ... *
நெட்டுயிர்த்துத்தட்டழிந்துளறுவார்வசன ... *
நிர்வாகமொன்றபேரும் ... *
பூராயமாயொன்றுபேசுமிடமொன்றைப் ... *
புலம்புவார்சிவராத்திரிப் ... ... *
போதுதுயிலோமென்றவிரதியருமறிதுயிற் ... *
போலேயிருந்துதுயில்வார் ... *
பாராதிதனிலுள்ளசெயலெலாமுடிவிலே ... *
பார்க்கினின்செயலல்லவோ ... ... *
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... *
பரிபூரணாநந்தமே ... (௩)

அண்டபகிரண்டமும்மாயாவிகாரமே ... *
யம்மாயையில்லாமையே ... ... *
யாமெனவுமறிவுமுண்டப்பாலுமறிகின்ற ... *
வறிவினையறிந்துபார்க்கி ... ... *

னெண்டிசைவிளக்குமொருதெய்வவருளல்லாம ... *
லில்லையெனுநினைவுமுண்டிங் ... *
கியானெனதறத்துரியநிறைவாகிநிற்பதே *
யின்பமெனுமன்புமுண்டு ... *
கண்டனவெலாமல்லவென்றுகண்டனைசெய்து ... *
கருவிகரணங்களோயக் ... ... *
கண்மூடியொருகணமிருக்கவென்றுற்பாழ்த்த ... *
கர்மங்கள்போராடுதே ... ... *
பண்டையுளகர்மமேகர்த்தாவெனும்பெயர்ப் ... *
பக்ஷநானிக்ஷிப்பனே ... *
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... *
பரிபூரணனந்தமே ... (௪)

சந்ததமுமெனதுசெயனினதுசெயலியானெனுந் ... *
தன்மைநினையன்றியில்லாத் ... *
தன்மையால்வேறலேன்வேதாந்தசித்தாந்த ... *
சமரசசுபாவமிதுவே ... *
யிந்தநிலைதெளியநானெக்குருகிவாடிய ... *
வியற்கைதிருவுளமறியுமே ... *
யிந்நிலையிலேசற்றிருக்கவென்றான்மடமை ... *
யிதசத்ருவாகவந்து ... *
சிந்தைகுடிகொள்ளுதேமலமாயைகன்மந் ... *
திரும்புமோதொடுவழக்காய்ச் ... *
சென்மம்வருமோவெனவும்யோசிக்குதேமனது ... *
சிரத்தையெனும்வாளுமுதவிப் ... *
பந்தமறமெய்ஞ்ஞானதீரமுந்தந்தெனை ... *
பாதுகாத்தருள்செய்குவாய் ... *
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... *
பரிபூரணனந்தமே ... (ரு)

பூதலயமாகின்றமாயைமுதலென்பர்சிலர் ... *
பொறிபுலனடங்குமிடமே ... *
பொருளென்பர்சிலர்கரணமுடிவென்பர்சிலர்குணம்... *
போனவிடமென்பர்சிலபேர் ... *
நாதவடிவென்பர்சிலர்விந்துமயமென்பர்சிலர் ... *
நட்டநடுவேயிருந்த ... *
நாமென்பர்சிலருருவமாமென்பர்சிலர்கருதி ... *
நாடிலருளென்பர்சிலபேர் ... *
பேதமறவுயிர்கெட்டநிலயமென்றிடுவர்சிலர் ... *
பேசினருவென்பர்சிலபேர் ... *

பின்னுமுன்னுங்கெட்டசூனியமதென்பர்சிலர் ... *
பிறவுமேமொழிவரிவையாற் ... ... ...*
பாதரசமாய்மனதுசஞ்சலப்படுமலாற் ... ... *
பரமசுகநிஷ்டைபெறுமோ ... ... ...*
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... *
பரிபூரணானந்தமே ... ... (௬)

அந்தகாரத்தையோரகமாக்கிமின்போலென் ... *
னறிவைச்சுருக்கினவரா ... ... *
ரவ்வறிவுதானுமேபற்றினதுபற்று ... ... *
யழுந்தவுந்தலைமீதிலே ... ... ... *
சொந்தமாயெழுதப்படித்ததார்மெய்ஞ்ஞான ... *
சுகநிஷ்டைசேராமலே ... ... ... *
சோற்றுத்துருத்தியைச்சதமெனவுமுண்டுண்டு ... *
தூங்கவைத்தவரார்கொலோ ... ... *
தந்தைதாய்முதலானவகிலப்ரபஞ்சந் ... ... *
தனைத்தந்ததெனதாசையோ ... ... ...*
தன்னையேநோவனோபிறரையேநோவனோ ... *
தற்காலமதைநோவனோ ... ... ... *
பந்தமானதுதந்தவினையையேநோவனோ ... *
பரமார்த்தமேதுமறியேன் ... ... *
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... *
பரிபூரணானந்தமே ... ... ... (௭)

வாராதெலாமொழியவருவனவெலாமெய்த ... *
மனதுசாக்ஷியதாகவே ... ... ... *
மருவநிலைதந்ததும்வேதாந்தசித்தாந்த ... ... *
மரபுசமரசமாகவே ... ... ... *
பூராயமாயுணரவுகமதுதந்ததும் ... ... *
பொய்யுடலைநிலையன்றெனப் ... ... *
போதநெறிதந்ததுஞ்சாசுவதவானந்த ... ...*
போகமேவீடென்னவே ... ... *
நீராளமாயுருகவுள்ளன்புதந்தது ... ... *
நின்னதருளின்னுமின்னு ... ... *
நின்னையேதுணையென்றவென்னையேகாக்கவொரு ... *
நினைவுசற்றுண்டாகிலோ ... ... ... *
பாராதியறியாதமோனமேயிடைவிடாய் ... *
பற்றுகநிற்கவருள்வாய் ... ... ... *
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... *
பரிபூரணானந்தமே ... ... ... (௮)

ஆழாழிகரையின்றிநிற்கவிலையோகொடிய ... *
வாலமமுதாகவிலையோ ... ... ... *
வக்கடலின்மீதுவடவனனிற்கவில்லையோ ... ... *
வந்தரத்தகிலகோடி .... ... ... *
தாழாமணிலைநிற்கவில்லையோமேருவுந் ... ... *
தனுவாகவளையவிலையோ ... ... ...*
சப்தமேகங்களும்வச்ரதாரணையிற் ... ... *
சஞ்சரிடத்திடவில்லையோ ... ... ... *
வாழாதுவாழவேயிராமனடியாற்சிலையு ... ...*
மடமங்கையாகவிலையோ ... ... *
மணிமந்த்ரமாதியால்வேண்டுசித்திகளுலக ... ... *
மார்க்கத்தில்வைக்கவிலையோ ... ... *
பாழானவென்மனங்குவியவொருதந்திரம் .... ... *
பண்ணுவதுனக்கருமையோ ... ... *
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ...*
பரிபூரணானந்தமே ... ... ... (௯)

ஆசைக்கொரளவில்லையகிலமெல்லாங்கட்டி ... *
யாளினுங்கடன்மீதிலே ... ... ... *
யாணைசெலவேநினைவரளகேசனிகராக ... *
வம்பொன்மிகவைத்தபேரு ... ... *
நேசித்துரசவாதவித்தைக்கலைந்திடுவர் ... ... *
நெடுநாளிருந்தபேரு ... ... ... *
நிலையாகவேயினுங்காயகற்பந்தேடி ... ... *
நெஞ்சுபுண்ணாவரெல்லாம் ... ... ... *
யோசிக்கும்வேளையிற்பசிதீரவுண்பது ... ... *
முறங்குவதுமாகமுடியு ... ... ... *
முள்ளதேபோதுநானெனக்குளறியே ... *
யொன்றைவிட்டொன்றுபற்றிப் ... ... *
பாசக்கடற்குளேவீழாமன்மனதற்ற ... ... ...*
பரிசுத்தநிலையையருள்வாய் ... ... *
பார்க்குமிடமெங்குமொருநீக்கமறநிறைகின்ற ... ...*
பரிபூரணானந்தமே ... ... ... (௰)

---

பரிபூரணானந்தமுற்றிற்று. ஆக ௰ம்.

# பொருள்வணக்கம்.

நித்தியமாய்நிர்மலமாய்நிட்களமாய் ... ... *
நிராமயமாய்நிறைவாய்நீங்காச் ... ... *
சுத்தமுமாய்த்தூரமுமாய்ச்சமீபமுமாய்த் ... ... *
துரியநிறைசுடராயெல்லாம் ... ... *
வைத்திருந்ததாரகமாயானந்த ... ... ... *
மயமாகிமனவாக்கெட்டாச் ... ... *
சித்துருவாய்நின்றவொன்றைச்சுகாரம்பப் ... ... *
பெருவெளியைச்சிந்தைசெய்வாம் ... ... (௧)

யாதுமனநினைவுமந்தநினைவுக்கு ... ... ... *
நினைவாகியாதின்பாலும் ... ... ... *
பேதமறநின்றுயிருக்குயிராகி ... ... ... *
யன்பருக்கேபேரானந்தக் ... ... *
கோதிலமுதூற்றரும்பிக்குணங்குறியொன் ... ... *
றறத்தன்னைக்கொடுத்துக்காட்டுந் ... ... *
தீதில்பராபரமானசித்தாந்தப் ... ... ... *
பேரொளியைச்சிந்தைசெய்வாம் ... ... (௨)

பெருவெளியாயைம்பூதம்பிறப்பிடமாய்ப் ... ... *
பேசாதபெரியமோனம் ... ... *
வருமிடமாய்மனமாதிக்கெட்டாத ... ... *
பேரின்பமயமாய்ஞானக் ... ... *
குருவருளாற்காட்டிடவுமன்பரைக்கோத் ... ... *
தறவிழுங்கிக்கொண்டப்பாலுந் ... ... *
தெரிவரிதாய்க்கலந்ததெந்தப்பொருளந்தப் ... ... *
பொருளினையாஞ்சிந்தைசெய்வாம் ... ... (௩)

இகபரமுமுயிர்க்குயிராயானெனதற் ... ... *
றவருறவையெந்தநாளுஞ் ... ... *
சுகபரிபூரணமானநிராலம்ப ... ... ... *
கோசரத்தைத்துரியவாழ்வை ... ... *
யகமகிழவருந்தேனைமுக்கனியைக் ... ... *
கற்கண்டையமிர்தைநாடி .. ... .. *
மொகுமொகெனவிருவிழிநீர்முத்திறைப்பக் ... *
கரமலர்கண்முகிழ்த்துநிற்பாம் ... ... (௪)

சாதிகுலம்பிறப்பிறப்புப்பந்தமுத்தி ... ... *
யருவுருவத்தன்மைநாம ... ... ... *
மேதுமின்றியெப்பொருட்குமெவ்விடத்தும் ... *
பிரிவறநின்றியக்கஞ்செய்யுஞ் ... ... *

சோதியைமாத்துவெளியைமனதவிழ ... ... *
நிறைவானதுரியவாழ்வைத் ... ... *
தீதில்பரமாம்பொருளைத்திருவருளை ... ... *
நினைவாகச்சிந்தைசெய்வாம். ... ... (௫)

இந்திரசாலங்கனவுகானலினீ ... ... *
ரானவுலகமெய்க்குத்தோன்றச் ... ... *
சந்ததமுஞ்சிற்பரத்தாலழியாத ... ... *
தற்பரத்தைச்சார்ந்துவாழ்க ... ... *
புந்திமகிழுறநாளுந்தடையறவா ... ...*
னந்தவெள்ளம்பொலிகவென்றே ... ... *
வந்தருளுங்குருமௌனிமலர்த்தாளை ... ... *
யனுதினமும்வழுத்தல்செய்வாம் ... ... (௬)

பொருளாகக்கண்டபொருளெவைக்குமுதற் ... *
பொருளாகிப்போதமாகித் ... ... *
தெருளாகிக்கருதுமன்பர்மிடிதீரப் ... ... *
பருகவந்தசெழுந்தேனாகி ... ... .. *
யருளானோர்க்ககம்புறமென்றுன்னாத ... ... *
பூரணவானந்தமாகி .. ... ... *
யிருடீரவிளங்குபொருளியாதந்தப் ... ... *
பொருளினையாமிறைஞ்சிநிற்பாம் ... (௭)

அருமறையின்சிரப்பொருளாய்விண்ணவர்மா ... *
முனிவர்சித்தராதியானோர் ... ... *
தெரிவரியபூரணமாய்க்காரணங்கற் ... ... *
பனைகடந்தசெல்வமாகிக்... ... ... *
கருதரியமலரின்மணமெள்ளிலெண்ணெ ... ...*
யுடலுயிர்போற்கலந்தெந்நாளுந் ... ... *
துரியநடுவூடிருந்தபெரியபொரு ... ... *
ளியாததனைத்தொழுதல்செய்வாம் ... ...(௮)

விண்ணாதிபூதமெல்லாந்தன்னகத்தி ... ... *
லடக்கிவெறுவெளியாய்ஞானக் ... ... *
கண்ணாரக்கண்டவன்பர்கண்ணூடே ... ... *
யானந்தக்கடலாய்வேறொன் ... ... *
றெண்ணாதபடிக்கிரங்கித்தானாகச் ... ... .. *
செய்தருளுமிறையேயுன்றன் ... ... *
றண்ணாருஞ்சாந்தவருடனைநினைந்து ... ... *
கரமலர்கடலைமேற்கொள்வாம் ... ... (௯)

விண்ணிறைந்தவெளியாயென்மனவெளியிற் ... *
கலந்தறிவாம்வெளியினூடுந் ... ... *
தண்ணிறைந்தபேரமுதாய்ச்சதானந்த ... ... *
மானபெருந்தகையேநின்பா ... *
லுண்ணிறைந்தபேரன்பாலுள்ளுருகி ... *
மொழிகுளறியுவகையாகிக் ... ... *
கண்ணிறைந்தபுனலுகுப்பக்கரமுகிழ்ப்ப ... *
நின்னருளைக்கருத்தில்வைப்பாம் ... (௰)

வேறு.

ஆதியந்தங்காட்டாதமுதலாயெம்மை ... *
யடிமைக்காவளர்த்தெடுத்தவன்னைபோல ... *
நீதிபெருங்குருவாகிமனவாக்கெட்டா ... *
நிச்சயமாய்ச்சொச்சமதாய்நிமலமாகி ... *
வாதமிடுஞ்சமயநெறிக்கரியதாகி ... *
மௌனத்தோர்பால்வெளியாய்வயங்காநின்ற ... *
சோதியையென்னுயிர்த்துணையைநாடிக்கண்ணீர் ... *
சொரியவிருகரங்குவித்துத்தொழுதல்செய்வாம் ...(௰௧)
அகரவுயிரெழுத்தனைத்துமாகிவேறு ... *
யமர்ந்ததெனவகிலாண்டமனைத்துமாகிப் ... *
பகர்வனவெல்லாமாகியல்லவாகிப் ... *
பரமாகிச்சொல்லரியபான்மையாகித் ... *
துகளறுசங்கற்பவிகற்பங்களெல்லாந் ... *
தோயாதவறிவாகிச்சுத்தமாகி ... *
நிகரில்பசுபதியானபொருளைநாடி ... *
நெட்டுயிர்த்துப்பேரன்பானினைதல்செய்வாம். (௰௨)

பொருள்வணக்கம்- முற்றுப்பெற்றது.



## சின்மயானந்தகுரு.

அங்கைகொடுமலர்தூவியங்கமதுபுளகிப்ப ... *
வன்பினாலுருகிவிழுநீ ... *
ராருகவாராதமுத்தியினதாவேச ... *
வாசைக்கடற்குண்மூழ்கிச் ... ... *
சங்கரசுயம்புவேசம்புவேயெனவுமொழி ... *
தழுதழுத்திடவணங்குஞ் ... ... *
சன்மார்க்கநெறியிலாத்துன்மார்க்கனேனையுந் ... *
தண்ணருள்கொடுத்தாள்வையோ ... ... *

துங்கமிகுபக்குவச்சனகன்முதன்முனிவோர்க ... *
டொழுதருகில்வீற்றிருப்பச் ... ... *
சொல்லரியநெறியையொருசொல்லாலுணர்த்தியே *
சொரூபானுபூதிகாட்டிச் ... *
செங்கமலபீடமேற்கல்லாலடிக்குள்வளர் ... *
சித்தாந்தமுத்திமுதலே ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... .. *
சின்மயானந்தகுருவே ... ... (க)

ஆக்கையெனுமிடிகரையைமெய்யென்றபாவிநா *
ணத்துவிதவாஞ்சையாத ... ... *
லரியகொம்பிற்றேனைமுடவனிச்சித்தபடி ... *
யாகுமறிவவிழவின்பந் ... ... *
தாக்கும்வகையேதிநாட்சரியைகிரியாயோக ... *
சாதனம்விடுத்ததெல்லாஞ் ... ... *
சன்மார்க்கமல்லவிவைநிற்கவென்மார்க்கங்கள் ... *
சாராதபேரறிவதாய் ... ... *
வாக்குமனமணுகாதபூரணப்பொருள்வந்து ... *
வாய்க்கும்படிக்குபாயம் ... *
வருவித்துவட்டாதபேரின்பமானசுக ... *
வாரியினைவாய்மடுத்துத் ... ... *
தேக்கித்திளைக்கநீமுன்னிற்பதென்றுகாண் ... *
சித்தாந்தமுத்திமுதலே ... ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... *
சின்மயானந்தகுருவே ... ... (உ)

ஔவியமிருக்கநானென்கின்றவாணவ ... *
மடைந்திட்டிருக்கலோப ... ... *
மருளின்மைகூடக்கலந்துள்ளிருக்கமே ... *
லாசாபிசாசமுதலாம் ... ... *
வெவ்வியகுணம்பலவிருக்குமென்னறிவூடு ... ... *
மெய்யனீவீற்றிருக்க ... ... *
விதியில்லையென்னிலோபூரணனெனும்பெயர் ... *
விரிக்கிலுரைவேறுமுளதோ ... *
கவ்வுமலமாகின்றநாகபாசத்தினாற் ... ... *
கட்டுண்டவுயிர்கண்மூர்ச்சை ... *
கடிதகலவலியவருஞானசஞ்சீவியே ... ... *
கதியானபூமிநடுவுட் ... ... *
செவ்விதின்வளர்ந்தோங்குதிவ்யகுணமேருவே ... *
சித்தாந்தமுத்திமுதலே ... *

சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... ... *
சின்மயானந்தகுருவே ... ... (௩)

ஐவகையெனும்பூதமாதியைவகுத்ததனு ... *
ளசரசரபேதமான ... ... *
யாவையும்வகுத்துநல்லறிவையும்வகுத்துமறை ... *
யாதிநூலையும்வகுத்துச் ... ... .. *
சைவமுதலாவளவில்சமயமும்வகுத்துமேற் ... ... *
சமயங்கடந்தமோன ... ... ... ... *
சமரசம்வகுத்தநீயுன்னைநானணுகவுந் ... ... *
தண்ணருள்வகுக்கவிலையே ... .. *
பொய்வளருநெஞ்சினர்கள்காணுதகாட்சியே ... *
பொய்யிலாமெய்யரறிவிற் ... ... *
போதபரிபூரணவகண்டிதாகாரமாய்ப் ... ... *
போக்குவரவற்றபொருளே ... ... ... *
தெய்வமறைமுடிவானபிரணவசொரூபியே ... *
சித்தாந்தமுத்திமுதலே ... ... ...*
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... ... *
சின்மயானந்தகுருவே ... ... ... (ச)

ஐந்துவகையாகின்றபூதபேதத்தினு ... ... *
லாகின்றவாக்கைநீர்மே ... ... ... *
லமர்கின்றகுமிழியெனநிற்கின்றதென்னநா ... *
னறியாதகாலமெல்லாம் ... ... ... *
புந்திமகிழுறவுண்டுடுத்தின்பமாவதே ... ... *
போந்தநெறியென்றிருந்தேன் ... ... ... *
பூராயமாகநினதருள்வந்துணர்த்தவிவை ... ... *
போனவழிதெரியவில்லை ... ... ...*
யெந்தநிலைபேசினுமிணங்கவில்லையல்லா ... ... *
விறப்பொடுபிறப்பையுள்ளே ... ...*
யெண்ணினெஞ்சதுபகீரொணுந்துயிலுரு ... ... *
திருவிழியுமிரவுபகலாய்ச் ... ... ... *
செந்தழலின்மெழுகானதங்கமிவையென்கொலோ ... *
சித்தாந்தமுத்திமுதலே ... ... ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... . ... *
சின்மயானந்தகுருவே ... ... ... (ரு)

காரிட்டவாணவக்கருவறையிலறிவற்ற ... ... *
கண்ணிலாக்குழவியைப்போற் ... ... *
கட்டுண்டிருந்தவெமையெளியில்விட்டல்லலாங் ... *
காப்பிட்டதற்கிசைந்த ... ... ... *

பேரிட்டுமெய்யென்றுபேசுபாழ்ம்பொய்யுடல் ... *
பலக்கவிளையமுதமூட்டிப் ... ... *
பெரியபுவனத்தினிடைபோக்குவரவுறுகின்ற ... *
பெரியவிளையாட்டமைத்திட் ... ... ... *
டேரிட்டதன்சுருதிமொழிதப்பினமனைவிட் ... ... *
டிடருறவுருக்கியிடர்தீர்த் ... ... *
திரவுபகலில்லாதபேரின்பவிட்டினி ... ... *
லிசைந்து துயில்கொண்மினென்று ... ... *
சீரிட்டவுலகன்னைவடிவானவெந்தையே ... ... *
சித்தாந்தமுத்திமுதலே ... ... ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... ... *
சின்மயானந்தகுருவே ... ... ... (௬)

கருமருவுகுகையனையகாயத்தினடுவுட் ... ... *
களிம்புதோய்செம்பனையயான் ... *
காண்டகவிருக்கநீஞானவனன்மூட்டியே ... ... *
கனிவுபெறவுள்ளுருக்கிப் ... ... ... *
பருவமதறிந்துநின்னருளானகுளிகைகொடு ... *
பரிசித்துவேதிசெய்து ... ... *
பத்துமாற்றுத்தங்கமாக்கியேபணிகொண்ட ... *
பக்ஷத்தையென்சொல்லுவே ... ... ... *
னருமைபெறுபுகழ்பெற்றவேதாந்தசித்தாந்த ... *
மாதியாமந்தமீது ... ... ... *
மத்துவிதநிலையராவென்னையாண்டுன்னடிமை ... *
யானவர்களறிவினூடுந் ... ... *
திருமருவுகல்லாலடிக்கீழும்வளர்கின்ற ... *
சித்தாந்தமுத்திமுதலே ... ... ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... ... *
சின்மயானந்தகுருவே ... ... ... (௭)

கூடுதலுடன்பிரிதலற்றுநிர்த்தொந்தமாய்க் *
குவிதலுடன்விரிதலற்றுக் ... ... *
குணமற்றுவரவினொடுபோக்கற்றுநிலையான ... ... *
குறியற்றுமலமுமற்று ... ... ... *
நாடுதலுமற்றுமேல்கீழ்நடுப்பக்கமென ... ... *
நண்ணுதலுமற்றுவிந்து ... ... ... *
நாதமற்றைவகைப்பூதபேதமுமற்று ... ... *
ஞாதுருவின்ஞானமற்று ... ... *
வாடுதலுமற்றுமேலொன்றற்றிரண்டற்று *
வாக்கற்றுமனமுமற்று ... ... *

மன்னுயரிபூரணச்சுகவாரிதன்னிலே ... ... *
வாய்மடுத்துண்டவசமாய்த் ... ... *
தேடுதலுமற்றவிட நிலையென்றமௌனியே ... ...*
சித்தாந்தமுத்திமுதலே ... ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... ... *
சின்மயானந்தகுருவே ... ... ...(அ)

தாராதவருளெலாந்தந்தருளமௌனியாய்த்... *
தாயனையகருணைகாட்டித் ... ... *
தாளிணையென்முடிசூட்டியறிவிற்சமாதியே ... *
சாசுவதசம்ப்ரதாய ... ... ... *
மோராமன்மந்திரமுமுன்னுமன்முத்திநிலை ... ...*
யொன்றேருடிரண்டெனும ... ... *
லொளியெனவும்வெளியெனவுமுருவெனவுநாதமா ...*
மொலியெனவுமுணர்வுமற் ... ... *
பாராதுபார்ப்பதேயேதுசாதனமற்ற ... ... *
பரமவனுபூதிவாய்க்கும் ... ... ...*
பண்பென்றுணர்த்தியதுபாராமலந்நிலை ... ... *
பதிந்தநின்பழவடியர்தஞ் ... ... ...*
சீராயிருக்கநினதருள்வேண்டுமையனே ... ... *
சித்தாந்தமுத்திமுதலே ... ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... ... *
சின்மயானந்தகுருவே ... ... ...(கூ)

போதமாயாதிநடுவந்தமுமிலாததாய்ப் ... ...*
புனிதமாயவிகாரமாய்ப் ... ... *
போக்குவரவில்லாதவின்பமாநின்றநின் ... *
பூரணம்புகலிடமதா ... ... ...*
வாதரவுவையாமலறிவினைமறைப்பதுநி ... ... *
னருள்பின்னுமறிவின்மைதீர்த் ... ... *
தறிவித்துநிற்பதுநினருளாகிலெள்ளியனேற் ... ... *
கறிவாவதேதறிவிலா ... ... ...*
வேதம்வருவகையேதுவினையேதுவினைதனக் ... *
கேடானகாயமேதென் ... ... *
னிச்சாசுதந்தரஞ்சிறிதுமிலையிகபர ... ...*
மிரண்டினுண்மலைவுதீரத் ... ... *
தீதிலருள்கொண்டினியுணர்த்தியெனையாள்வையோ ... *
சித்தாந்தமுத்திமுதலே ... ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... *
சின்மயானந்தகுருவே ... (ய)

பத்திநெறிநிலைநின்றநவகண்டபூமிப் ... *
பரப்பைவலமாகவந்தும் ... *
பரவையிடைமூழ்கியுநதிகளிடைமூழ்கியும் ... *
பசிதாகமின்றியெழுநா ... *
மத்தியிடைநின்றுமுதிர்சருகுபுனல்வாயுவினை ... *
வன்பசிதனக்கடைத்து ... *
மௌனத்திருந்துமுயர்மலைநுழைவுபுக்கியு ... *
மன்னுதசநாடிமுற்றுஞ் ... *
சுத்திசெய்துமூலப்ராணனொடுங்கியைச் ... *
சோமவட்டத்தடைத்துஞ் ... *
சொல்லரியவமுதுண்டுமேற்பவுடல்கற்பங்க ... *
டோறுநிலைநிற்கவீறு ... *
சித்திசெய்துஞ்ஞானமலதுகதிகூடுமோ ... *
சித்தாந்தமுத்திமுதலே ... *
சிரகிரிவிளங்கவருதக்ஷிணாமூர்த்தியே ... *
சின்மயானந்தகுருவே ... (௰க)

சின்மயானந்தகுரு-முற்றுப்பெற்றது ஆ௬௬.

## மௌனகுருவணக்கம்.

ஆசைநிகளத்தினைநிர்த்தூளிபடவுதறி ... *
யாங்காரமுளையையெற்றி ... *
யத்துவிதமதமாகிமதமாறுமாறுக ... *
வங்கையின்விலாழியாக்கிப் ... *
பாசவிருடன்னிழலெனச்சுளித்தார்த்துமேற் ... *
பார்த்துப்பரந்தமனதைப் ... *
பாரித்தகவளமாய்ப்பூரிக்கவுண்டுமுக ... *
படாமன்னமாயைநூறித் ... *
தேசுபெறநீவைத்தசின்முத்திராங்குசச் ... *
செங்கைக்குளேயடங்கிச் ... *
சின்மயானந்தசுகவெள்ளம்படிந்துநின் ... *
திருவருட்பூர்த்தியான ... *
வாசமுறுசற்சாரமீதென்னையொருஞான ... *
மத்தகஜமெனவளர்த்தாய் ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... *
மரபில்வருமௌனகுருவே ... (க)
ஐந்துவகையாகின்றபூதமுதலாகமு ... *
மடங்கவெளியாகவெளிசெய் ... *

தறியாமையறிவாதிபிறிவாகவறிவார்க ... ... *
ளறிவாகநின்றநிலையிற் ... ... ... *
சிந்தையறநில்லென்றுசும்மாவிருத்திமேற் ... *
சின்மயானந்தவெள்ளந் ... ... ... *
தேக்கித்திளைத்துநானதுவாயிருக்கநீ ... ... *
செய்சித்ரமிகநன்றுகா ... ... ... *
ணெந்தைவடவாற்பரமகுருவாழ்கவாழவரு ... *
ளியநந்திமரபுவாழ்க ... ... ... *
வென்றடியர்மனமகிழவேதாகமத்துணி ... ... *
பிரண்டில்லையொன்றென்னவே ... ... *
வந்தகுருவேவீறுசிவஞானசித்திநெறி ... ... *
மௌனோபதேசகுருவே ... ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... ... *
மரபில்வருமௌனகுருவே ... ... (உ)

ஆதிக்கநல்கினவராரிந்தமாயைக்கெ ... *
னறிவன்றியிடமில்லையோ ... ... *
வந்தரப்புஷ்பமுங்கானலின்னீருமோ ... ... *
ரவசரத்துயயோகமோ ... ... ... *
போதித்தநிலையையுமயக்குதேயபயநான் ... ... *
புக்கவருடோற்றிடாமற் ... ... ... *
பொய்யானவுலகத்தைமெய்யாநிறுத்தியென் ... *
புந்திக்குளிந்த்ரசாலஞ் ... ... ... *
சாதிக்குதேயிதனைவெல்லவுமுபாயநீ ... ... *
தந்தருள்வதென்றுபுகல்வாய் ... ... ... *
சண்மதஸ்தாபனமும்வேதாந்தசித்தாந்த ... ... *
சமரசநிர்வாகநிலையு ... ... ... ... *
மாதிக்கொடண்டப்பரப்பெலாமறியவே ... ... *
வந்தருளுஞானகுருவே ... ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... ... *
மரபில்வருமௌனகுருவே ... ... (௩)

பின்னையபொய்யுடலைநிலையென்றுமையிலகு ... *
விழிகொண்டுமையல்பூட்டு ... ... ... *
மின்னார்களின்பமேமெய்யென்றும்வளர்மாட ... *
மேல்வீடுசொர்க்கமென்றும் ... ... *
பொன்னையழியாதுவளர்பொருளென்றுபோற்றியிப் ... *
பொய்வேஷமிகுதிகாட்டிப் ... ... *
பொறையறிவுதுறவீதலாதிநற்குணமெலாம் ... *
போக்கிலேபோகவிட்டுத் ... ... ... *

தன்னிகரிலோபாதிபாழ்ம்பேய்பிடித்திடத் ... *
தரணிமிசைலோகாயதன் ... ... ... *
சமையநடைசாராமல்வேதாந்தசித்தாந்த ... *
சமரசசிவானுபூதி ... ... ... *
மன்னவொருசொற்கொண்டெனைத்தடுத்தாண்டனின்பின் ... *
வாழ்வித்தஞானகுருவே .. ... ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... *
மரபில்வருமௌனகுருவே ... ... (௬)

போனகமிருக்கின்றசாலையிடைவெண்டுவெ ... *
புசித்தற்கிருக்குமதுபோற் ... ... *
புருஷர்பெறுதர்மாதிவேதமுடனாகவும் ... ... *
புகலுமதிநூலாம்பயன் ... ... *
ஞானநெறிமுக்யநெறிகாட்சியனுமானமுத ... *
நானாவிதங்கடேர்ந்து ... ... ... *
நானுனக்குளறுபடைபுடைபெயர்த்திடவு ... *
நான்குசாதனமுமோர்ந்திட் ... ... ... *
டானநெறியாஞ்சரியையாதிசோபானமுற் ... *
றனுபக்ஷசம்புபக்ஷ ... ... ... *
மாமிருவிகற்பமுமாயாதிசேவையு ... ... *
மறித்திரண்டொன்றொன்றுமோர் ... *
மானதவிகற்பமறவென்றுநிற்பதுநமது ... ... *
மரபென்றபரமகுருவே ... ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... ... *
மரபில்வருமௌனகுருவே ... ... (௭)

கல்லாதவறிவுமேற்கேளாதகேள்வியுங் ... ... *
கருணைசிறிதேதுமில்லாக் ... ... *
காட்சியுங்கொலைகளவுகட்காமமாட்சியாக் ... *
காதலித்திடுநெஞ்சமும் ... ... *
பொல்லாதபொய்ம்மொழியுமல்லாதுநன்மைகள் ... *
பொருந்துகுணமேதுமறியேன் ... *
புருஷர்வடிவானதேயல்லாதுகனவிலும் ... ... *
புருஷார்த்தமேதுமில்லே ... ... *
னெல்லாமறிந்தநீயறியாததன்றெனக் ... ... *
கெவ்வண்ணமுய்வண்ணமோ ... ... *
விருளையிருளென்றவர்க்கொளிதாரகம்பெறு ... *
மெனக்குநின்னருட்டாரகம் ...
வல்லானெனும்பெய்ருனக்குள்ளதேயிந்த ... *
வஞ்சகனையாளறிணையாய் ... ...

மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... *
மரபில்வருமௌனகுருவே ... ... (சா)

கானகமிலங்குபுலிபசுவொடுகுலாவுநின் ... *
கண்காணமதயானைநீ ... ... *
கைகாட்டவுங்கையானெகிடிக்கெனப்பெரிய ... ... *
கட்டைமிகவேந்திவருமே ... ... *
போனகமமைந்ததெனவக்காமதேனுநின் ... ... *
பொன்னடியினின்றுசொலுமே ... *
புவிராஜர்கவிராஜர்தவராஜனென்றுனைப் ... ... *
போற்றிஜயபோற்றியென்பார் ... *
ஞானகருணாகரமுகங்கண்டபோதிலே ... ... *
நவநாதசித்தர்களுமுன் ... ... *
னட்பினைவிரும்புவார்சுகர்வாமதேவர்முதன் ... *
ஞானிகளுமுனைமெச்சுவார் ... ... *
வானகமுமண்ணகமும்வந்தெதிர்வணங்கிடுமுன் ... *
மகிமையதுசொல்லவெளிதோ ... ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... *
மரபில்வருமௌனகுருவே ... ... ... (எ)

சருகுபலபக்ஷணிகளொருகோடியல்லாற் ... ...*
சகோரபக்ஷிகள்போலவே ... ... ...*
தவளநிலவொழுகமிர்ததாரையுண்டழியாத ... ... *
தன்மையரனந்தகோடி ... ... *
யிருவினைகளற்றிரவுபகலென்பதறியாத ... ... *
வேகாந்தமோனஞான ... ... *
வின்பநிஷ்டையர்கோடிமணிமந்த்ரசித்திநிலை *
யெய்தினர்கள்கோடிசூழக் *
குருமணியிழைத்திட்டசிங்காதனத்தின்மிசை ...*
கொலுவீற்றிருக்குநின்னைக் ... ... *
கும்பிட்டனந்தமுறைதெண்டனிட்டென்மனக் ... *
குறையெலாந்தீரும்வண்ண ... ... *
மருமலரெடுத்துனிருதாளையர்ச்சிக்கவெனை ...*
வாவென்றழைப்பதென்றோ ... ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... ... *
மரபில்வருமௌனகுருவே ... ... (அ)

ஆங்காரமானகுலவேடவெம்பேய்பாழ்த்த ... *
வாணவத்திலும்வலிதுகா ... ... *
ணறிவினைமயக்கிடுநடுவறியவொட்டாதி ... *
யாதொன்றுதொடினுமதுவாய்த் ... ... *

தாங்காதுமொழிபேசுமரிகரப்பிரமாதி ... *
தம்மொடுசமானமென்னுந் ... *
தடையற்றதேரிலஞ்சுருவாணிபோலவே ... *
தன்னிலசையாதுநிற்கு ... *
மீங்காரெனக்குநிகரென்னப்ரதாபித் ... *
திராவணாகாரமாகி ... ... ... *
யிதயவெளியெங்கணுந்தன்னரசுநாடுசெய் ... *
திருக்குமிதனொடெநேரமும் ... ... *
வாங்காவிலாவடிமைபோராடமுடியுமோ ...*
மௌனோபதேசகுருவே ... ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... ... *
மரபில்வருமௌனகுருவே ... ... (கூ)

பற்றுவெகுவிதமாகியொன்றைவிட்டொன்றனைப் ... *
பற்றியுழல்கிருமிபோலப் ... ... ...*
பாழ்ஞ்சித்தைபெற்றநால்வெளியாகநின்னருள் ... *
பகர்ந்துமறியேன்றுவிதமோ ... ...*
சிற்றறிவதன்றியுமெவனோனுமொருமொழி ... *
திடுக்கென்றுரைத்தபோது ... ...*
சித்தைசெவியாகவேபறையறையவுதரவெந் ... *
தீநெஞ்சமளவளாவ ... ... ... *
வுற்றுணரவுணர்வற்றுன்மற்றவெறியினர்போல ...*
வுளறுமேவன்முத்திமார்க்க ... ... *
முணர்வதெப்படியின்பதுன்பஞ்சமானமா ...*
யுறுவதெப்படியாயினு ... ... *
மற்றெனக்கையநீசொன்னவொருவார்த்தையினை ... *
மலையிலக்கெனநம்பினேன் ... ... *
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன் ... ... *
மரபில்வருமௌனகுருவே ... ... (ய)

மௌனகுருவணக்கம் - முற்றுப்பெற்றது ஆ-சுரு.

---

## கருணாகரக்கடவுள்.

---

நிர்க்குணநிராமயநிரஞ்சனநிராலம்ப ... ... *
நிர்விஷயகைவல்யமா ... ... *
நிஷ்களவசங்கசஞ்சலரகிதநிர்வசன ... ... *
நிர்த்தொந்தநித்தமுக்த ... ... *
தற்பரவிஸ்வாதீதவ்வேர்மபரிபூரண ... ... *
சதானந்தஞானபகவ ... ... 

சம்புசிவசங்கரசர்வேசவென்றுநான் - - *
சர்வகாலமுநினைவனே - - - *
அற்புதவகோசரநிவர்த்திபெறுமன்பருக் - *
கானந்தபூர்த்தியான - - - *
வத்துவிதநிச்சயசொரூபசாக்ஷாத்கார - *
வனுபூதியனுகூதமுங் - - *
கற்பனையறக்காணமுக்கணுடன்வடநிழற் - - *
கண்ணாடிருந்தகுருவே - - *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு - - *
கருணாகரக்கடவுளே - - (௧)

மண்ணாதியைந்தொடுபுறத்திலுளகருவியும் - *
வாக்காதிசுரோத்ராதியும் - - - *
வளர்கின்றசப்தாதிமனமாதிகலையாதி - - *
மன்னுசுத்தாதியுடனே - - - *
தொண்ணூற்றொடாறுமற்றுள்ளனவுமௌனியாய்ச் - *
சொன்னவொருசொற்கொண்டதே - *
தூவெளியதாயகண்டானந்தசுகவாரி - - *
தோற்றுமதையென்சொல்லுவேன் - *
பண்ணாருமிசையினொடுபாடிப்படித்தருட் - *
பான்மைநெறிநின்றுதவரூப் - - *
பக்குவவிசேஷராய்நெக்குநெக்குருகிப் - *
பணிந்தெழுந்திருகைகூப்பிக் - - *
கண்ணாறுகளாபுரளநின்றவுன்பரையெலாங் - - *
கைவிடாக்காட்சியுறவே - - *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு - *
கருணாகரக்கடவுளே - - - (௨)

எல்லாமுனடிமையேயெல்லாமுனுடைமையே - *
யெல்லாமுனுடையசெயலே - - *
யெங்கணும்வியாபிநீயென்றுசொலுமியல்பென் - *
றிருக்காதிவேதமெல்லாஞ் - - *
சொல்லான்முழக்கியதுமிக்கவுபகாரமாச் - - *
சொல்லிறந்தவரும்விண்டு - - - *
சொன்னவையுமிவைநல்லகுருவானபேருந் - *
தொகுத்தநெறிதானுமிவையே - *
யல்லாமலில்லையெனநன்றாவறிந்தே - *
யறிந்தபடிநின்றுசுகநா - *
ஞாதவண்ணமேயிவ்வண்ணமாயினே - - *
னதுவுநினதருளென்னவே - - *

கல்லாதவறிஞனுக்குள்ளேயுணர்த்தினை - - . *
கதிக்குவகையேதுபுகலாய் - - - *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு - *
கருணாகரக்கடவுளே - - - (௬)

பட்டப்பகற்பொழுதையிருளென்றமருளர்தம் - *
பக்ஷமோவெனதுபக்ஷம் - - - *
பார்த்தவிடமெங்கணுங்கோத்தநிலைகுலையாது - *
பரமவெளியாகவொருசொற் - - *
றிட்டமுடன்மௌனியாயருள்செய்திருக்கவுஞ் - *
சேராமலாராகநான் - - - *
சிறுவீடுகட்டியதினடுசோற்றையுண்டுண்டு - *
தேக்குசிறியார்கள்போல - - *
நட்டணையதாக்கற்றகல்வியும்விவேகமு - *
நன்னிலயமாகவுன்னி - - *
நானென்றுநீயென்றிரண்டில்லையென்னவே - - *
நடுவேமுளைத்தமனதைக் - - *
கட்டவறியாமலேவாடினேனெப்போது - - *
கருணைக்குறித்தாவனோ - - *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு - - *
கருணாகரக்கடவுளே - - (௭)

மெய்விடாநாவுள்ளமெய்யருளிருந்துநீ - *
மெய்யானமெய்யையெல்லா - - *
மெய்யெனவுணர்த்தியதுமெய்யிதற்கையமிலை - - *
மெய்யேதுமறியாவெறும் - - *
பொய்விடாப்பொய்யினேனுள்ளத்திருந்துதான் - *
பொய்யானபொய்யையெல்லாம் - - *
பொய்யெனவண்ணமேபுகலவைத்தாயெனிற் - *
புன்மையேனென்செய்குவேன் - - *
மைவிடாதெழுநீலகண்டகுருவேவிஷ்ணு - - *
வடிவானஞானகுருவே - - *
மலர்மேவிமறையோதுநான்முகக்குருவே - - *
மதங்கடொறுநின்றகுருவே - - - *
கைவிடாதேயென்றவன்பருக்கன்பாய்க் - - *
கருத்தூடுணர்த்துகுருவே - - - *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு - - *
கருணாகரக்கடவுளே - - (௮)

பண்ணேனுனக்கானபூசையொருவடிவிலே - *
பாவித்திறைஞ்சவாங்கே - - -

டார்க்கின்றமலரூடுநீயேயிருத்தியப் - - *
பனிமலரெடுக்கமனமு - - - *
நண்ணேனலாமலிருகைதான்குவிக்கவெனி - - *
னாணுமென்னுளநிற்றிநீ - - *
நான்கும்பிடும்போதரைக்கும்பிடாதலா - *
னான்பூசைசெய்யன்முறையோ - - *
விண்ணேவிண்ணாதியாம்பூதமேநாதமே - - *
வேதமேவேதாந்தமே - - *
மேதக்ககேள்வியேகேள்வியாம்பூமிக்குள் - - *
வித்தேயவித்தின்முளையே - - *
கண்ணேகருத்தேயெனெண்ணேயெழுத்தே - *
கதிக்கானமோனவடிவே - - *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு - *
கருணாகரக்கடவுளே - - (௬)

அந்தமுவ்வேதமொழியாதொன்றுபற்றினது - *
தான்வந்துமுற்றுமெனலாற் - - *
சகமீதிருந்தாலுமரணமுண்டென்பது - *
சதாநிஷ்டர்நினைவதில்லை - - *
சிந்தையறியார்க்கிதுபோதிப்பதல்லவே - - *
செப்பினும்வெகுதர்க்கமாந் - *
திவ்யகுணமார்க்கண்டர்சுகராதிமுனிவோர்கள் - *
சித்தாந்தநித்யரலவோ - *
இந்த்ராதிதேவதைகள்பிரமாதிகடவுள - - *
ரிருக்காதிவேதமுனிவ - - *
ரெண்ணரியகணநாதர்நவநாதசித்தர்க - - *
ளிரவிமதியாதியோர்கள் - - *
கந்தருவர்கின்னரர்கண்மற்றையர்களியாவருங் - *
கைகுவித்திடுதெய்வமே - *
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு - *
கருணாகரக்கடவுளே - - (௭)

ஆள்ளுமறியாமனதுபலிகொடுத்தேன்கர்ம - - *
துஷ்டதேவதைகளில்லை - - *
துரியநிறைசாந்ததேவதையாமுனக்கே - - *
தொழும்பனன்பபிஷேகநீ - *
ருள்ளுறையிலென்னாவிநைவேத்தியம்ப்ராண - *
னொன்றுண்டுமதிதூபதீப - - *
மொருகாலமன்றிது சதாகாலபூசையா - *
வொப்புவித்தேன்கருணைகூர் - *

தெள்ளிமறைவடியிட்டவமுதப்பிழம்மே
தெளிந்ததேனேசீனியே
திவ்யரசமியாவுந்திரண்டொழுகுபாகே
தெவிட்டாதவானந்தமே
கள்ளனறிவூடுமெள்ளமௌவெளியாய்க்
கலக்கவருநல்லவுறவே
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (௮)

உடல்குழையவென்பெலாநெக்குருகவிழிநீர்க
ளூற்றெனவெதும்பியூற்ற
வூசிகாந்தத்தினைக்கண்டணுகல்போலவே
யோருறவுமுன்னியுன்னிப்
படபடெனநெஞ்சம்பதைத்துண்ணடுக்குறப்
பாடியாடிக்குதித்துப்
பனிமதிமுகத்திலேநிலவனையபுன்னகை
பரப்பியார்த்தார்த்தெழுந்து
மடலவிழுமலரனையகைவிரித்துக்கூப்பி
வானேயவாணினின்ப
மழையேமழைத்தாரைவெள்ளமேநீடூழி
வாழியெனவாழ்த்தியேத்துங்
கடன்மடைதிறந்தனையவன்பரன்புக்கெளியை
கன்னெஞ்சனுக்கெளியையோ
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (௯)

இங்கற்றபடியங்குமெனவறியுநல்லறிஞ
ரெக்காலமும்முதவுவா
ரின்சொறவரார்பொய்மையாமிழுக்குறாயா
ரிரங்குவார்கொலைகள்பயிலார்
சங்கற்பசித்தரவருள்ளக்கருத்திலுறை
சாக்ஷிநீயிகபரத்துஞ்
சந்தானகற்பகத்தேவாயிருந்தே
சமஸ்தவின்பமுமுதவுவாய்
சிங்கத்தையொத்தெனைப்பாயவருவினையினைச்
சேதிக்கவருசிம்புளே
சிந்தாகுலத்திமிரமகலவருபானுவே
தீனனேன்கனாயேறவே
கங்கற்றபேராசைவெள்ளத்தின்வளரருட்
ககனவட்டக்கப்பலே

கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு - - *
கருணாகரக்கடவுளே - - - (ய)
கருணாகரக்கடவுள்- முற்றுப்பெற்றது-ஆ௨௫௬.

## சித்தர்கணம்.

திக்கொடுதிகந்தமும்மனவேகமென்னவே - *
சென்றோடியாடிவருவீர் - - *
செம்பொன்மகமேருவொடுகுணமேருவென்னவே *
திகழ்துருவனளவளாவி - *
யுக்ரமிகுசக்ரதரனென்னனிற்பீர்லகையி - *
லுழுந்தமிழுமாசமனமா - *
வோரொருகடலையுப்பருகவல்லீரிந்திர - *
னுலகுமயிராவதமுமே - - *
கைக்கெளியபந்தாவெடுத்துவிளையாடுவீர் - *
ககனவட்டத்தையெல்லாங் - - *
கடுகிடையிருத்தியேயஷ்டகுலவெற்பையுங் *
காட்டுவீர்மேலுமேலு - - *
மிக்கசித்திகளெலாம்வல்லநீரடிமைமுன் - *
விளங்கவருசித்தியிலையோ - - *
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற - *
வித்தகச்சித்தர்கணமே - - (க)

பாட்டளிதுதைந்துவளர்கற்பகநனீழலைப் - *
பாரினிடைவரவழைப்பீர் - - *
பத்மநிதிசங்கநிதியிருபாரிசத்திலும் - *
பணிசெயுந்தொழிலாளர்போற் - *
கேட்டதுகொடுத்துவரநிற்கவைப்பீர்பிச்சை *
கேட்டுப்பிழைப்போரையுங் - *
கிரீடபதியாக்குவீர்கற்பாந்தவெள்ளமொரு *
கேணியிடைகுறுகவைப்பீ - - *
ரோட்டினையெடுத்தாயிரத்தெட்டுமாற்றுக - *
வொளிவிடும்பொன்னாக்குவீ - - *
ருரகனுமிளைப்பாறயோகதண்டத்திலே *
யுலகுசுமையாகவருளான் - - *
மீட்டிடவும்வல்லநீரொன்மனக்கல்லையனன் *
மெழுகாக்கிவைப்பதரிதோ - - *
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற - *
வித்தகச்சித்தர்கணமே. - - (உ)

பாரோடுநன்னீராதியொன்றொடொன்றாகவே *
பற்றிலயமாகுபோது ... ... *
பாவெளியின்மருவுவீர்கற்பாந்தவெள்ளம் ...*
பரந்திடினதற்குமீதே ... .. *
நீரினுறைவண்டாய்த்துவண்டுசிவயோகநிலை *
நிற்பீர்விகற்பமாகி ... ... *
நெடியமுகிலேழும்பரந்துவருஷிக்கிலோ... *
நிலவுமதிமண்டலமதே ... ... *
யூனொனவிளங்குவீர்பிரமாதிமுடிவில்விடை *
யூர்தியருளாலுலவுவீ ... ... *
ருலகங்கள்கீழ்மேலதாகப்பெருங்காற் ... *
றுலாவினற்றாரணியினான் ... ...*
மேருவெனவசையாமனிற்கவல்லீருமது ... *
மேதக்கசித்தியெளிதோ... ...*
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற ... *
வித்தகச்சித்தர்கணமே ... ... (௫)

எண்ணரியபிறவிதனின்மானிடப்பிறவிதா... *
னியாதினும்மரிதரிதுகா ... ...*
ணிப்பிறவிதப்பினாலெப்பிறவிவாய்க்குமோ ... *
வேதுவருமோவறிகிலேன் ... ...*
கண்ணகனிலத்துநானுள்ளபொழுதேயருட் *
ககனவட்டத்தினின்று .. ... *
கானூன்றிநின்றுபொழியானந்தமுகிலொடு *
கலந்துமதியவசமுறவே ... ... *
பண்ணுவதுநன்மையிந்நிலைபதியுமட்டுமே ...*
பதியாயிருந்ததேசப் ... ... *
பவுரிகுலையாமலேகௌரிகுண்டலியாயி... ...*
பண்ணவிதனருளினாலே ... ... *
விண்ணிலவுமதியமுதமொழியாதுபொழியவே *
வேண்டுவேனுமதடிமைநான் ... *
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற ...*
வித்தகச்சித்தர்கணமே ... ... (௬)

பொய்திகழுமுலகநடையென்சொல்கேனென்சொல்கேன்
பொழுதுபோக்கேதென்னிலோ ... *
பொய்யுடனிமித்தம்புசிப்புக்கலந்திடல் ...*
புசித்தபின்கண்ணுறங்கல்... ... *
கைதவமலாமலிதுசெய்தவமதல்லவே ... *
கண்கெட்டபேர்க்கும்வெளியாய்க் ... *

மட்டசித்திபுநலன்பருக்கருள ... *
விருதுகட்டியபொன்னன்மமே... ... *
யண்டம்காடிபுகழ்காவைவாழுமகி ... *
லாண்டநாயகியெனம்மையே.*/.* ... (க)

அகிலாண்டநாயகி சந்தவிருத்த முற்றிற்று- ஆகு௫அசு.

# பெரியநாயகிவிருத்தம்.

காற்றைப்பிடித்துமட்கரகத்தடைத்தபடி ...*
கன்மட்புனற்குளூறுங் ... ... *
கடைகெட்டநவவாயில்பெற்றபசுமட்கலக் ... *
காயத்துளேனையிருத்திச்... ... ...*
சோற்றைச்சுமத்திநீபத்தித்துவைக்கத் *
துருத்திக்குண்மதுவென்னவே ... *
துள்ளித்துடித்தென்னபேறுபெற்றேனருட் .. *
டோயநீயாய்ச்சல்செய்து ... *
நாற்றைப்பதித்ததென ஞானமாம்பயிரதனை ...*
நாட்டிப்புலப்பட்டியு ... ... *
நமனுணதீப்பூமேனுகாமன்முன்னின்று ... *
நாடுசிவபோகமான ... ... ...*
பேற்றைப்பகுத்தருளியெனையாளவல்லையோ *
பெரியவகிலாண்டகோடி ... *
பெற்றநாயகிபெரியகபிலைமாநகர்மருவு ... *
பெரியநாயகியம்மையே... ... (க)

பெரியநாயகி விருத்தம்-முற்றிற்று- ஆகு௫அஎ.

# தந்தைதாய்.

தந்தைதாய்மகவுமனைவாழ்க்கையாக்கை ... ... *
சகமனைத்துமௌனியருடழைத்தபோதே ... *
யிந்திரசாலங்கனவுகானனீரா ... ... ... ... *
யிருந்ததுவேயிவ்வியற்கையென்னேயென்னே ... (க)
என்னைநான்கொடுக்கவொருப்பட்டகால ... ... *
மியாதிருந்தென்னைவைபோயென்னென்னைநீங்கா *
வன்னைபோலருள்பொழியுங்கருணைவாரி ... ... *
யானந்தப்பெருமுகிலேயரசேசொல்லாய் ... (உ)
அரசேநின்திருக்கருணையல்லாதொன்றை ... *
யறியாதசிறியனுனதனுன்முத்திக் ... ... *

கரைசேரும்படிக்கினருட்புணையைக்கூட்டுங் ... ... *
கைப்பிடியேகடைப்பிடியாக்கருத்துட்கொண்டேன் (௩)

கண்டேனிங்கென்னையுமென்றனையுநீங்காக் ... *
கருணையுநின்றன்னையுநான்கண்டேன்கண்டேன் ... *
விண்டேனென்றெனைப்புறம்பாத்தள்ளவேண்டாம் ... *
விண்டதுநின்னருட்களிப்பில்வியப்பாலன்றே (௪)

ஓவென்றசுத்தவெளியொன்றேநின்றிங் ... *
குயிராயெல்லாம்வம்மினெனவுவட்டாவின்பத் - *
தேவென்றநீகலந்துகலந்துமுத்தி - *
சேர்த்தனையேற்குறைவாமோஜெகவிலாசம் - (௫)

ஜெகத்தையெல்லாமணுவளவுஞ்சிதருவண்ணஞ் - *
சேர்த்தணுவில்வைப்பையணுத்திரளையெல்லா - *
மகத்துவமாம்பிரமாண்டமாகச்செய்யும் - *
வல்லவாநீநினைந்தவாறேயெல்லாம் - (௬)

சொல்லாலேவாய்துடைப்பதல்லானெஞ்சந் *
துடித்திருகணீரருவிசொரியத்தேம்பிக் - *
கல்லாலேயிருந்தநெஞ்சுங்கல்லான்முக்கட் - *
கனியேநெக்குருகிடவுங்காண்பேன்கொல்லோ (௭)

தந்தைதாய் - முற்றுப்பெற்றது - ஆ-டு ௫௯௪.

## பெற்றவட்கே.

பெற்றவட்கேதெரியுமந்தவருத்தம்பிள்ளை - *
பெருப்பேதைவறிவாளோபேரானந்த - *
முற்றவர்க்கேகண்ணீர்கம்பலையுண்டாகு - *
முருதவரோகன்னெஞ்சேமுடையராவார் (௧)

ஆவாவென்றழுதுதொழுங்கையராகி - *
யப்பனேயானந்தவடிகளேநீ - - *
வாவாவென்றவர்க்கருளுங்கருணையெந்தாய் - *
வன்னெஞ்சர்க்கிரங்குவதெவ்வாறுநீயே - (௨)

நீயேயிங்கெளியேற்குந்தாகமோக - *
நினைவூடேநின்றுணர்த்திநிகழ்த்தலாலே - *
பேயேற்குந்தணக்கெனவோரன்புமுண்டோ - *
பெம்மானேயின்னமன்புபெருகப்பாராய் - (௩)

பாராயோவென்றுயரமெல்லாமையா - *
பகருமுன்னேதெரியாதோபாவியேன்முன் *

வாராயோவின்னமொருகாலானுலு ... ... ... *
மலர்க்காலென்சென்னிமிசைவைத்திடாயோ ... ... (௪)
வைத்திங்காலைப்பிடித்துக்கண்ணின்மார்பில் ... *
வைத்தணைத்துக்கொண்டுகையால்வளைத்துக்கட்டிச் ... *
சித்தமிசைப்புகவிருத்திப்பிடித்துக்கொண்டு ... *
தியக்கமறவின்பசுகஞ்சேர்வதென்றோ ... ... (௫)
சோராமற்சிற்றினத்தைப்பிரித்தெந்நாளுந் ... *
திருவடிப்பேரினத்துடனேசேராவண்ண ... ... *
மாராகநானலைந்தேனரசேநீதா ... ... ... *
னறிந்திருந்துமாயையிலேனழுந்தவைத்தாய் ... ... (௬)
வைத்தபொருளுடலாவிமூன்றுநின்கை... ... ... *
வசமெனவேயான்கொடுக்கவாங்கிக்கொண்டு ... *
சித்தமிசைப்புகுந்ததுதான்மெய்யோபொய்யோ... ... *
சிறியேற்கிங்குளவுரையாய்திகையாவண்ணம் ... ... (௭)
திகையாதோவெந்நாளும்பேரானந்தத் ... ... ... *
தெள்ளமுதமுதவாமற்றிவலைகாட்டி ... ... *
வகையாகவலக்கழித்தாயுண்டுடுத்து ... ... ... *
வாழ்ந்தேனுனிரண்டுகான்மாடுபோலே... ... (௮)
மாடுமக்கள்சிற்றிடையார்செம்பொனுடை ... ... ... *
வைத்தகனதனமேடைமாடகூடம் ... ... *
வீடுமென்பாற்றொடர்ச்சியோவிடைவிடாமன் ... *
மிக்ககதிவிடன்றோவிளங்கல்வேண்டும் .. ... (௯)
விளங்கவெனக்குள்ளுள்ளேவிளங்காநின்ற ... ... *
வேதகமேபோதகமேவிமலவாழ்வே ... ... *
களங்கரகிதப்பொருளேயென்னைநீங்காக் ... ... *
கண்ணுதலேநாதாந்தக்காட்சிப்பேறே ... .. (௰)
நாதமேநாதாந்தவெளியேசுத்த ... ... ... *
ஞாதுருவேஞானமேஞேயமேநல் ... ... *
வேதமேவேதமுடிவானமோன ... ... ... *
வித்தேயிங்கென்னையினிவிட்டிடாதே ... ...(௰௧)

பெற்றவட்கே - முற்றுப்பெற்றது. ஆ. சு௱௫.

## கல்லாலின்.

கல்லாலினீழறனிலொருநால்வர்க்குங் ... ... ... *
கடவுணீயுணர்த்திவதுங்கைகாட்டென்றாற் ... ... *

சொல்லாலேசொலப்படுமோசொல்லுந்தன்மை ... *
திருப்புபற்றிக்கடன்கடக்குந்திறன்பெயன்றே... (௧)
அன்றேவாமோவெனவுஞ்சமயகோடி .. ... *
யத்தனையும்வெவ்வேறுயரற்றநேமோ ... ... *
நின்றேமியநினைப்பெறுமாமறவ்வாறுங்கே ... ... *
நின்னருள்கொண்டறிவதல்லாமனறிவேறுண்டோ (௨)
நெறிபார்க்கிநின்னையன்றியகிலம்வேறு ... ... ... *
நிலநீர்தீக்கால்வானுநீயலாத ... ... ... *
குறியாதுமில்லையென்றால்யாங்கள்வேறே... ... ... *
கோதையொருகூறுடையாய்கூறாய்கூறாய் ... (௩)
கூறுயவைம்பூதச்சுமையைத்தாங்கிக் ... ... ... *
குணமிலாமனமெனும்பேய்க்குரங்கின்பின்னே ... *
மாறுதகவலையுடன்சுழலவென்னை ... ... ... *
வைத்தனையேபரமேநின்மகிமைநன்றே ... ... (௪)
நன்றெனவுந்தீதெனவுமெனக்கிங்குண்டோ... ... *
நானாகிநீயிருந்தநியாயஞ்சற்றே.. ... ... *
யின்றெனக்குவெளியானாலெல்லாம்வல்ல... ... *
விறைவாநின்னடியருடனிருந்துவாழ்வேன் ... (௫)
வாழ்வெனவுந்தாழ்வெனவுமிரண்டாப்பேசும் ... ... *
வையகத்தார்கற்பனையாமயக்கமான... ... ... *
பாழ்வலையைக்கிழித்துதறிச்செயல்போய்வாழப்... ... *
பரமேநின்றுணைந்தப்பார்வையெங்கே... ... (௬)
எங்கேயெங்கேயருளென்றேமையிரந்தா ... ... *
னேழையிவனெனவுமெண்ணியிச்சைகூறு ... ... *
மங்கேயெங்கேயெளிவந்தென்னையாண்ட... ... *
வாரமுதேயுனைக்காண்பானலந்துபோனேன் ... (௭)
போனநாட்கிரங்குவதேதொழிலாவிங்ஙன் ... ... *
பொருந்துநாளத்தனையும்போக்கினேனென் ... *
ஞானநாயகனேநின்மோனஞான ... ... ... *
நாட்டமுற்றுவாழ்ந்திருக்குநாளெந்நாளோ ... (௮)
நாட்பட்டகமலமென்னவிதயமேவு ... ... ... *
நறுந்தேனேதுன்மார்க்கநாரிமார்கண் ... *
வாட்பட்டகாயமிந்தக்காயமென்றே ... ... *
வன்கூற்றுமுயிர்பிடிக்கவருமந்நீதி... ... ... (௯)
நீதியெங்கேமறையெங்கேமண்விண்ணெங்கே ... ... *
நித்தியராமவர்களெங்கேநெறிதப்பாத... ... ... *

சாதியெங்கேயொழுக்கமெங்கேயாங்களெங்கே ... *
தற்பரநீயின்றுமொன்றைச்சமைப்பதானால் ...(௰)
ஆனாலும்யானெனதிங்கற்றவெல்லை ... ... *
யதுபோதுமதுகதிதானல்லவென்று ... ... *
போனாலும்யான்போவனல்லான்மோனப் ... *
புண்ணியனேவேறொருபொருளைநாடேன் ... (௰௧)
பொருளைநின்பூரணமேமேலிட்டகாலம் ... *
போக்குவரவுண்டோதற்போதமுண்டோ ... *
விருடானுண்டோவல்லால்வெளிதானுண்டோ ... ... *
வின்பமுண்டோதுன்பமுண்டோயாமங்குண்டோ (௰௨)
உண்டோநீபடைத்தவுயிர்த்திரளிலென்போ ... *
லொருபாவிதேகாதியுலகம்பொய்யாக் ... *
கண்டேயுமெள்ளளவுத்துறவுமின்றிக் ... *
காசினிக்குளலைந்தவராற்காட்டாய்தேவே ... (௰௩)
தேவரெல்லாந்தொழச்சிவந்தசெந்தாண்முக்கட் ... *
செங்கரும்பேமொழிக்குமொழிதித்திப்பாக ... *
மூவர்சொலுந்தமிழ்கேட்குந்திருச்செவிக்கே ... *
மூடனேபுலம்பியசொன்முற்றுமோதான் ... (௰௪)
முற்றுமோவெனக்கினியானந்தவாழ்வு ... *
மூதறிவுக்கினியாய்நின்முளரித்தாளிற் ... *
பற்றுமோசற்றுமில்லையையோவையோ ... *
பாவிபடுங்கட்கலக்கம்பார்த்திலாயோ ... (௰௫)
பார்த்தனவெல்லாமழியுமதனாற்சுட்டிப் ... *
பாராதேபார்த்திருக்கப்பரமேமோன ... *
மூர்த்திவடிவாயுணர்த்துங்கைக்காட்டுண்மை ... *
முற்றியெனதல்லல்வினைமுடிவதென்றோ ... (௰௬)
என்றுனைநீயன்றுளம்யாமென்பதென்னை ... *
யிதுநிற்கவெல்லாந்தாமில்லையென்றே ... *
பொன்றிடச்செய்வல்லவநீயமைப்படைக்கும் ... *
பொற்புடையாவென்னினதுபொருந்திடாதே (௰௭)
பொருந்துசகமனைத்தினையும்பொய்பொய்யென்று ... *
புகன்றபடிமெய்யென்றேபோதரூபத் ... *
திருந்தபடியென்றிருப்பதன்றேயன்றோ ... *
வெம்பெருமான்யான்கவலையெய்தாக்காலம் (௰௮)
காலமேகாலமொருமூன்றுங்காட்டுங் ... *
காரணமேகாரணகாரியங்களில்லாக் ... ... *

கோலமேயெனைவாவாவென்றுகூவிக் ... *
குறைவறநின்னருள்கொடுத்தாற்குறைவோசொல்லாய் (யகூ)
சொல்லாயதகுதியெல்லாங்கடந்துநின்ற ... ... *
சொரூபானந்தச்சுடரேதொண்டனேனைக் ... *
கல்லாகப்படைத்தாலுமெத்தநன்றே ... *
கரணமுடனுறவுகலக்கமாட்டேன் ... (உய)
கலங்காதநெஞ்சுடையஞானதீரர் ... ... *
கடவுளுனைக்காணவெகாயமாதி ... *
புலங்காணூர்நானொருவன்ஞானம்பேசி ... *
பொய்க்கூடுகாத்ததென்னபுதுமைகண்டாய் (உக)
கண்டிலையோயான்படும்பாடெல்லாமென்று ... *
கண்ணிருந்துந்தெரியாதோர்கசிந்துள்ளன்பார் ... *
தொண்டரடித்தொண்டனன்றோகருணைநீங்காச் ... *
சுத்தபரிபூரணமாஞ்சோதிநாதா ...(உஉ)
சோதியாயிருட்பிழம்பைச்சூறையாடுந் ... *
தூவெளியேயெனைத்தொடர்ந்துதொடர்ந்தெந்நாளும் *
வாதியாநின்றவினைப்பகையைவென்ற ... *
வாழ்வேயிங்குனைப்பிரிந்துமயங்குகின்றேன் ... (உ௩)
மயக்குறுமென்மனமணுகாப்பாதைகாட்டி ... *
வல்வினையைப்பறித்தனையேவாழ்வேநானெனன் ... *
செயக்கடவேன்செயலெல்லாநினதேயென்று ... *
செங்கைக்குவிப்பேனல்லாற்செயல்வேறில்லை ... (உச)
வேறுபடுஞ்சமயமெல்லாம்புகுந்துபார்க்கின் ... *
விளங்குபரம்பொருளேநின்விளையாட்டல்லான் ... *
மாறுபடுங்கருத்தில்லைமுடிவின்மோன ... *
வாரிதியினதித்திரள்போல்வயங்கிற்றம்மா ... (உரு)
அம்மாவீததிசயந்தானன்றோவன்றோ ... *
வகண்டநிலையாக்கியென்னையறிவாம்வண்ணஞ் ... *
சும்மாவேயிருக்கவைத்தாயையாவாங்கே ... *
சுகமயமாயிருப்பதல்லாற்சொல்வானென்னே ... (உசா)
என்னேநான்பிறந்துழலவந்தவாறிங் ... *
கெனக்கெனவோர்செயலிலையேயேழையென்பான் *
முன்னேசெய்வினையெனவும்பின்னேவந்து ... *
மூளும்வினையெனவும்வாமுறையேயெனெந்தாய் ...(உஎ)
தாயானதண்ணருளைநிரம்பவைத்துத் ... *
தமியேனைப்புரவாமற்றள்ளித்தள்ளிப் ... *

போயானதென்கொலையாவேகதேசம் ... ... *
பூரணத்துக்குண்டோதான்புகலல்வேண்டும் (௨௮)
புகலரியநின்விளையாட்டென்னேயெந்தாய் ... *
புன்மையறிவுடையவென்னைப்பொருளாப்பண்ணி ... *
யிகல்விளைக்குமலமாயைகன்மத்தூடே ... ... *
யிடருறவுஞ்செய்தனையேயிரக்கமீதோ ... (௨௯)
இரக்கமொடுபொறையீதலறிவாசார ... ... *
மில்லேனுனல்லோர்களீட்டங்கண்டாற் ... ... *
கரக்குமியல்புடையேன்பாழ்நெஞ்சமெந்தாய் ... *
கருந்தாதோவல்லுருக்கோகரியகல்லோ ... (௩௰)

கல்லாலின்-முற்றுப்பெற்றது-ஆ௨. ௫௩௫.

---

## பராபரக்கண்ணி.

சீராருந்தெய்வத்திருவருளாம்பூமிமுதற் ... ... *
பாராதியாண்டபதியேபராபரமே ... ... (௧)
கண்ணுரைக்கண்டோர்கருப்பொருள்காணுமலருள் ... *
விண்ணூடிருந்தவின்பவெற்பேபராபரமே ... (௨)
சிந்தித்தவெல்லாமென்சிந்தையறிந்தேயுதவ ... *
வந்தகருணைமழையேபராபரமே ... ... (௩)
ஆராவமுதேயரசேயானந்தவெள்ளப் ... *
பேராறேமோனப்பெருக்கே பராபரமே ... (௪)
ஆரறிவாரென்னவனந்தமறையோலமிடும் ... *
பேரறிவேயின்பப்பெருக்கே பராபரமே ... (௫)
உரையிறந்தவன்பருளத்தோங்கொளியாயோங்கிக் ... *
கரையிறந்தவின்பக் கடலேபராபரமே ... (௬)
எத்திக்குந்தானாகியென்னிதயத்தேயூறித் ... *
தித்திக்குமானந்தத் தேனேபராபரமே ... ... (௭)
திக்கொடுகீழ்மேலுந்திருவருளாம்பொற்பறிந்தோர் ... *
கைக்குள்வளர்நெல்லிக் கனியேபராபரமே ... ... (௮)
முத்தேபவளமேமொய்த்தபசும்பொற்குடமே *
சித்தேயென்னுள்ளத்தெளிவேபராபரமே ... ... (௯)
கண்ணேகருத்தேயென்கற்பகமேகண்ணிறைந்த ... *
விண்ணேயானந்த வியப்பேபராபரமே ... ... (௰)
வாக்காய்மனதாய்மனவாக்கிறந்தவர்பாற் ... ... *
றாக்காதேதாக்குந் தனியேபராபரமே ... ... (௰௧)

பார்த்தவிடமெல்லாம்பரவெளியாய்த்தோன்றவொரு ... *
வார்த்தைசொல்லவந்தமனுவேபராபரமே ... (௰௨)
வானந்தமண்ணினந்தம்வைத்துவைத்துப்பார்க்கவெனக் *
கானந்தந்தந்தவரசேபராபரமே ... ... (௰௩)
அன்பைப்பெருக்கியெனதாருயிரைக்காக்கவந்த ... *
வின்பப்பெருக்கேயிறையேபராபரமே ... (௰௪)
வானமெல்லாங்கொண்டமௌனமணிப்பொட்டகத்துக் *
கானபணியானவணியேபராபரமே ... ... (௰௫)
ஓடுமிருநிதியுமொன்றாகக்கண்டவர்க ... ... *
ளாடும்பொருளானநட்பேபராபரமே ... ... (௰௬)
சித்தநினைவுஞ்செயுஞ்செயலுநீயெனவா ... ... *
ழூத்தமர்கட்கானவுறவேபராபரமே ... ... (௰௭)
போதாந்தப்புண்ணியர்கள்போற்றிசயபோற்றியெனும் *
வேதாந்தவீட்டின்விளக்கேபராபரமே ... ... (௰௮)
மூத்தாந்தவீதிமுளரிதொழுமன்பருக்கே ... ... *
சித்தாந்தவீதிவருந்தேவேபராபரமே ... ... (௰௯)
ஈனந்தருமுடலமென்னதியானென்பதற ... *
வானந்தம்வேண்டியலைந்தேன்பராபரமே ... (௨௰)
என்புருகிநெஞ்சமிளகிக்கரைந்துகரைந் ... *
தன்புருவாய்நிற்கவலந்தேன்பராபரமே ... .. (௨௧)
சுத்தவறிவாய்ச்சுகம்பொருந்தினல்லாலென் ... *
சித்தந்தெளியாதென்செய்வேன்பராபரமே ...(௨௨)
மாறாவனுபூதிவாய்க்கினல்லாலென்மயக்கந் ... *
தேறாதென்செய்வேன்சிவமேபராபரமே ... (௨௩)
தாகமறிந்தின்பநிட்டைதாராயேலாகெடுவேன் ... *
றேகம்விழுந்திடிமென்செய்வேன்பராபரமே ...(௨௪)
அப்பாவென்னெய்ப்பில்வைப்பேயாற்றுகிலேன்போற்றியென்று*
செப்புவதல்லால்வேறென்செய்வேன்பராபரமே ... (௨௫)
உற்றறியுமென்னறிவுமுட்கருவிபோற்சவிமாண் ... ... *
டற்றுமின்பந்திலையேயையாபராபரமே ... (௨௬)
சொல்லாலடங்காச்சுகக்கடலில்வாய்மடுக்கி ... ... *
னல்லாலென்றாகமறுமோபராபரமே ... ... (௨௭)
பாராயோவென்னைமுகம்பார்த்தொருகாலென்கவலை ... *
தீராயோவாய்திறந்துசெப்பாய்பராபரமே ... (௨௮)
ஓயாதோவென்கவலையுள்ளேயானந்தவெள்ளம் ... *
பாயாதோவையாபகராய்பராபரமே ... (௨௯)

ஞகோவுனைப்பிரிந்தாருள்ளங்கனலில்வைத்த ... ... *
பாகோமெழுகோபகராய்பராபரமே ... ... (௩௰)
கூர்த்தவறிவத்தனையுங்கொள்ளைகொடுத்துனருளைப் ... *
பார்த்தவனுமென்னைமுகம்பாராய்பராபரமே ... (௩௧)
கடலமுதேதேனேயென்கண்ணேகவலைப் ... ... *
படமுடியாதென்னைமுகம்பார்நீபராபரமே ... (௩௨)
உள்ளமறிவாயுழைப்பரிவாய்நானேழை ... ... *
தள்ளிவிடின்மெத்தத்தவிப்பேன்பராபரமே ... (௩௩)
கன்றினுக்குச்சேதாகனிந்திரங்கல்போலவெனக் ... *
கென்றிரங்குவாய்கருணையெந்தாய்பராபரமே ... ... (௩௪)
எண்ணாதவெண்ணமெலாமெண்ணியெண்ணியேழைநெஞ்சம் *
புண்ணாகச்செய்ததினிப்போதும்பராபரமே ... (௩௫)
ஆழித்துரும்பெனவேயங்குமிங்குமுன்னடிமை... ... *
பாழிற்றிரிவதென்னபாவப்பராபரமே ... ... (௩௬)
கற்றவறிவாலுனைநான்கண்டவன்போற்கூத்தாடிற் *
குற்றமென்றென்னெஞ்சேகொதிக்கும்பராபரமே ... (௩௭)
ஐயோவுனைக்காண்பானாசைகொண்டதத்தனையும் ... *
பொய்யோவெளியாப்புகலாய்பராபரமே ... (௩௮)
துன்பக்கண்ணீரிற்றுளைந்தேற்குன்னானந்த ... ... *
வின்பக்கண்ணீர்வருவதெந்நாள்பராபரமே ... (௩௯)
வஞ்சனையும்பொய்யுமுள்ளேவைத்தழுக்காறாயுளறு ... *
நெஞ்சனுக்குமுண்டோநெறிதான்பராபரமே ... (௪௰)
பாசம்போய்நின்றவர்போற்பாராட்டியானாலு ... *
மோசம்போனேனென்முறையோபராபரமே ... (௪௧)
நன்றறியேன்றீதறியேனென்றுநின்றவனா ... ... *
ரென்றறியேனானேழையென்னேபராபரமே ... (௪௨)
இன்றுபுதிதன்றேயெளியேன்படுந்துயர ... ... *
மொன்றுமறியாயோவுரையாய்பராபரமே ... (௪௩)
எத்தனைதான்சன்மமெடுத்தெத்தனைநான்பட்டதுய ... *
ரத்தனையுநீயறிந்ததன்றோபராபரமே ... ... (௪௪)
இந்தநாட்சற்றுமிரங்கிலையேற்காலன்வரு ... ...*
மந்தநாட்காக்கவல்லாரார்காண்பராபரமே ... ... (௪௫)
உற்றுற்றுநாடியுளமருண்டபாவியைநீ ... ... *
சற்றிரங்கியாளத்தகாதோபராபரமே ... ... (௪௬)
எள்ளளவுநின்னைவிடவில்லாவெனைமயக்கிற்... ... *
றள்ளுதலாமெல்லைபலன்சாற்றாய்பராபரமே ... (௪௭)

பாடிப்படித்துலகிற்பாராட்டிநிற்பதற்கோ *
தேடியெனையடிமைசேர்த்தாய்பராபரமே (௪௮)

சொன்னத்தைச்சொல்வதல்லாற்சொல்லறவென்சொல்லிறுதிக் *
கென்னத்தைச்சொல்வேனெளியேன்பராபரமே (௪௯)

சொல்லும்பொருளுமற்றுச்சும்மாவிருப்பதற்கே *
யல்லும்பகலுமெனக்காசைபராபரமே (௫௰)

நேசதிருவிகற்பநிட்டையல்லாலுன்னடிமைக் *
காசையுண்டோநீயறியாதல்றேபராபரமே (௫௧)

துச்சனெனவேண்டாமித்தொல்லுலகிலல்லலஃகண்டா *
லச்சமிகவுடையேனையாபராபரமே (௫௨)

[illegible]ன்ணுவாரோனுமுனைக்கைகுவியாராயினந்த *
மண்ணுவார்நட்பமதியேன்பராபரமே (௫௩)

கொல்லாவிரதங்குவலயமெல்லாமோங்க *
வெல்லார்க்குஞ்சொல்லுவதென்னிச்சைபராபரமே (௫௪)

எத்தாற்பிழைப்பேனோவந்தையேநின்னருட்கே *
பித்தானேன்மெத்தவுநான்பேதைபராபரமே (௫௫)

வாயினாற்பேசாமௌனத்தைவைத்திருந்துந் *
தாயிலார்போனேன்றளர்ந்தேன்பராபரமே (௫௬)

அன்னையிலாச்சேய்போலலக்கணுற்றேன்கண்ணார *
வென்னகத்திற்றாய்போலிருக்கும்பராபரமே (௫௭)

உற்றுநினைக்கிற்றுயரமுள்ளுள்ளேசெந்தீயாய்ப் *
பற்றநொந்தேனென்னைமுகம்பார்நீபராபரமே (௫௮)

பொய்யனிவனென்றுமெள்ளப்போதிப்பார்சொற்கேட்டுக் *
கைவிடவும்வேண்டாமென்கண்ணேபராபரமே (௫௯)

எண்ணமறிந்தேயிளைப்பறிந்தேயேழையுய்யும் *
வண்ணந்திருக்கருணைவையாய்பராபரமே (௬௰)

நாட்டாதேயென்னையொன்றினாட்டியிதமகிதங் *
காட்டாதேயெல்லாநீகண்டாய்பராபரமே (௬௧)

உன்னைநினைந்துன்னிறைவினுள்ளேயுலாவுமென்னை *
யன்னைவயிற்றினடைக்காதேபராபரமே (௬௨)

பரமுனக்கென்றெண்ணும்பழக்கமேமாறா *
வரமெனக்குத்தந்தருளென்வாழ்வேபராபரமே (௬௩)

வந்தித்துநின்னைமறவாக்கடனாகச் *
சிந்திக்கநின்னதருள்செய்யாய்பராபரமே (௬௪)

எவ்வுயிருமென்னுயிர்போலெண்ணியிரங்கவுநின் *
றெய்வவருட்கருணைசெய்யாய்பராபரமே (௬௫)

வெட்டவெளிப்பேதையன்யான்வேறுகபடொன்றறியேன் *
சிட்டருடன்சேரனந்ததென்னடன்பராபரமே ... (௬௬)
இரவுபகலற்றவிடத்தேகாந்தயோகம் ... ... *
வரவுந்திருக்கருணைவையாய்பராபரமே ... (௬௭)
மால்காட்டிச்சிந்தைமயங்காமநின்றுசுகக் ... *
கால்காட்டிவாங்காதேகண்டாய்பராபரமே ... (௬௮)
எப்பொருளுநீயெனவேயெண்ணிநான்றோன்றாத ... *
வைப்பையறியாநிலையாவையாய்பராபரமே ... (௬௯)
கப்பமாவிருப்பதுவேசுட்டற்றபூரணமென் ... *
றெப்பமாலறிதற்கெளிதோபராபரமே ... (௭௰)
மூலமொருவியின்பக்கமுடியடிநாட்பண்ணறநின் ... *
நலமொருநாளிற்படுதென்றேசாற்றாய்பராபரமே ...(௭௧)
மைவண்ணந்தீர்ந்தமௌனிசொன்னதெவ்வண்ண ... *
மவ்வண்ணநிட்டையருளாய்பராபரமே ... (௭௨)
வித்தன்றியாதும்விளைவதுண்டோநின்னருளாஞ் ... *
சித்தன்றியாங்களுண்டோசெப்பாய்பராபரமே ... (௭௩)
ஆங்காரமற்றுன்னறிவானவன்பருக்கே ... ... *
தூங்காததூக்கமதுதூக்கும்பராபரமே ... (௭௪)
சிந்தையவிழ்ந்தவிழ்ந்துசின்மயமாநின்னடிக்கே ... *
வந்தவர்க்கேயின்பநிலைவாய்க்கும்பராப்ரமே ... (௭௫)
சொல்லாலுமலாப்போற்சொல்லிறந்துநீயாகி ... *
னல்லாலெனக்குமுத்தியாமோபராபரமே ... (௭௬)
பேச்சாகாமோனப்பிறவாநூலைத்தெளற் ... *
காச்சார்சுமேற்பயனுண்டாமோபராபரமே ... (௭௭)
கெட்டியென்றுன்னன்பர்மலங்கெட்டயர்ந்தோர்பூரணமாந் *
தொட்டிலுக்குட்சேய்போற்றுயின்றார்பராபரமே ... (௭௮)
காட்டவருளிருக்கக்காணுதிருண்மலத்து ... *
நாட்டமெனக்குவரநன்றோபராபரமே ... (௭௯)
எத்தன்மைக்குற்றமியற்றிடினுந்தாய்பொறுக்கு ... *
மத்தன்மைநின்னருளுமன்றோபராபரமே ... (௮௰)
எத்தனையோதேர்ந்தாலுமென்னலையின்பமுண்டோ ... *
சித்துருவேயின்பச்சிவமேபராபரமே ... (௮௧)
மண்ணொருவிக்காட்டிமறைந்துமறையாவருளைக் *
கண்ணொருகண்ணாகவென்றுகாண்பேன்பராபரமே ...(௮௨)
பஞ்சரித்துநின்னைப் பலகாலிரந்ததெல்லா ... *
மஞ்சலெனும்பொருட்டேயன்றோபராபரமே ... (௮௩)

எங்கெங்கேபார்த்தாலுமெவ்வுயிர்க்குமவ்வுயிரா ... *
யங்கிங்கிருப்பதுநீயன்றோபராபரமே ... (௮௪)
அனைத்துமாய்நின்றுமேயான்வேறாநின்னை ... *
நினைக்குமாறெங்கேநிகழ்த்தாய்பராபரமே ... (௮௫)
நின்போதத்தாலேநினைப்புமறப்புமென்று ... *
லென்போதமெங்கேயியம்பாய்பராபரமே ... (௮௬)
ஒன்றைநினைத்தொன்றைமறந்தோமெனமெல்லாநீ *
யென்றறிந்தாலெங்கேயியங்கும்பராபரமே ... (௮௭)
கொழுந்தில்வயிரமெனக்கோதறவுள்ளன்பி ... *
லழுந்துமவர்க்கேசுகமுண்டாகும்பராபரமே (௮௮)
பற்றும்பயிர்க்குப்படர்கொழுந்தும்போற்பருவம் ... *
பெற்றவர்க்கேநின்னருடான்பெறும்பராபரமே ... (௮௯)
யோகியர்க்கேஞானமொழுங்காம்பேரன்பான ... *
ராகியரும்யோகமுன்னைசார்ந்தோர்பராபரமே ... (௯௰)
அல்லும்பகலுமறிவாகிநின்றவர்க்கே ... *
சொல்லும்பொருளுஞ்சுமைகாண்பராபரமே ... (௯௧)
எச்சிலென்றுபூவையிகழ்ந்தோர்க்குனைப்போற்றப் ..*
பச்சிலையுங்கிள்ளப்படுமோபராபரமே ... (௯௨)
அந்தக்கரணமடங்கத்துறப்பதுவே ... *
யெந்தத்துறவினுநன்றெந்தாய்பராபரமே ... (௯௩)
தன்னையறிந்தாற்றலைவன்மேற்பற்றலது ... ... *
பின்னையொருபற்றுமுண்டோபேசாய்பராபரமே (௯௪)
அன்பாற்கரைந்துகண்ணீராறுகண்டபுண்ணியருக் ... *
குன்பால்வரவழிதானுண்டோபராபரமே ... (௯௫)
தன்னையறிந்தருளேதாரகமாநிற்பதுவே ... *
யுன்னையறிதற்குபாயம்பராபரமே ... (௯௬)
கற்றகலையானிலைதான்காணுமோகாண்பதல்லா ... *
மற்றவிடத்தேவெளியாமன்றோபராபரமே ... (௯௭)
கண்மூடிக்கண்விழித்துக்காண்பதுண்டோநின்னருளாம் ... *
விண்மூடினெல்லாம்வெளியாம்பராபரமே ... (௯௮)
நேரேநினதருளென்னெஞ்சக்கவரினுன்னும் ... *
பாரேன்சுகமும்படைப்பேன்பராபரமே ... (௯௯)
வான்காணவேண்டின்மலையேறலொக்குமுன்னை ... *
நான்காணப்பாவனைசெய்நாட்டம்பராபரமே ... (௱)
வாதனைவிட்டுன்னருளின்மன்னினல்லால்வேறுமொரு ... *
சாதனைதானுண்டோநீசாற்றாய்பராபரமே ... (௱௧)

பாரகமும்விண்ணகமும்பற்றாகநிற்பதருட் ... *
டாரதத்தைப்பற்றியன்றோசாற்றாய்பராபரமே (௱௨)

விளக்குத்தகளியையும்வேறன்றோர்நின்னைத் ... *
துளக்கமறச்சீவனென்றுசொல்வார்பராபரமே ... (௱௩)

யாராதிநீயாப்பகர்ந்தாலகமெனவு ... *
மாராயுஞ்சீவனுநீயாங்காண்பராபரமே ... (௱௪)

பொய்யைப்பொய்யென்றறியும்போதத்துக்காதரவுன் *
மெய்யருளேயன்றோவிளம்பாய்பராபரமே ... ... (௱௫)

வருவான்வந்தேனெனல்போன்மன்னியழியுஞ்சகத்தைத் *
தெரிவாகவில்லையென்றதீரம்பராபரமே ... (௱௬)

மாயாசகமில்லையென்மற்றெனக்கோர்பற்றுமில்லை ... *
நீயேநானென்றுவந்துநிற்பேன்பராபரமே ... (௱௭)

வானாதிநீயெனவேவைத்தமறையென்னையுநீ ... *
தானாகச்சொல்லாதோசாற்றாய்பராபரமே ... (௱௮)

வெள்ளக்கருணைமதவேழமாநின்னருட்கென் ... *
கள்ளக்கருத்தேகவளம்பராபரமே ... (௱௯)

வண்டாய்த்துவண்டுமௌனமலரணைமேற் ... *
கொண்டாற்கோவின்பங்கொடுப்பாய்பராபரமே (௱௰)

மாயைமுதலாம்வினைநீமன்னுயிர்நீமன்னுயிர்தேர்ந் ... *
தாயுமறிவானதுநீயன்றோபராபரமே ... (௱௰௧)

என்னறிவும்யானுமெனதென்பதுவுமாமிவைக ... *
ணின்னவையேயன்றோநிகழ்த்தாய்பராபரமே (௱௰௨)

பாரறியாதண்டப்பரப்பறியாதுன்பெருமை ... *
யாரறிவார்நானோவறியேன்பராபரமே ... (௱௰௩)

அண்டமனைத்திலுமாயப்பாலுக்கப்பாலுங் ... *
கொண்டநின்னையாரறிந்துகொள்வார்பராபரமே (௱௰௪)

ஒப்புயர்வொன்றின்றியொலிபுகாமோனவட்டக் ... *
கப்பனுக்காம்வான்பொருணீகண்டாய்பராபரமே (௱௰௫)

என்போலெளியவருமெங்கெங்கும்பார்த்தாலு ... *
முன்போல்வலியவருமுண்டோபராபரமே ... (௱௰௬)

பார்க்கினண்டபிண்டப்பரப்பனைத்துநின்செயலே ... *
யார்க்குஞ்செயலிலையேயையாபராபரமே ... (௱௰௭)

ஒன்றேயலவேயுருவேயருவேயோ ... ... *
வென்றேயழைப்பதன்னையென்றுபராபரமே ... (௱௰௮)

செப்புவதெல்லாஞ்செபநான்சிந்திப்பதென்னுநின் ... *
னொப்பிதியானமெனவோர்ந்தேன்பராபரமே ... (௱௰௯)

ஆரிருந்தென்னூர்போயென்னாரமுதாநின்னருளின் *
சீரிருந்தாலுய்வேன்சிவமேபராபரமே ... (௱௨௰)
வஞ்சநமன்வாதனைக்கும்வன்பிறவிவேதனைக்கு .. *
மஞ்சியுனையடைந்தேனையாபராபரமே ... (௱௨௧)
எந்தப்படியுன்னிதயமிருந்ததெமக் ... ... *
கந்தப்படிவருவதன்றோபராபரமே ... (௱௨௨)
எந்தெந்தநாளுமெனைப்பிரியாதென்னுயிராய்ச் ... *
சிந்தைகுடிகொண்டவருட்டேவேபராபரமே ... (௱௨௩)
அஞ்சலஞ்சவென்றடிமைக்கப்போதைக்கப்போதே ... *
நெஞ்சிலுணர்த்துநிறைவேபராபரமே ... ... (௱௨௪)
என்னையுன்றன்கைக்களித்தார்யாவரென்னையான்கொடுத்துப் *
பின்னையுன்னாற்பெற்றநலம்பேசேன்பராபரமே (௱௨௫)
வாய்பேசாவூமையெனவைக்கவென்றோநீமௌனத் ... *
தாயாகவந்தருளைத்தந்தாய்பராபரமே ... ... (௱௨௬)
தன்னைத்தந்தென்னைத்தடுத்தாண்டநின்கருணைக் ... *
கென்னைக்கொண்டென்னபலனெந்தாய்பராபரமே (௱௨௭)
மார்க்கண்டர்க்காகமறலிபட்டபாட்டையுன்னிப் ... *
பார்க்கினன்பர்க்கென்னபயங்காண்பராபரமே (௱௨௮)
சுட்டியுணராமற்றுரியநிலையாய்வெளியில் ... ... *
விட்டநின்னையாரேவியப்பேன்பராபரமே ... (௱௨௯)
சூதொன்றுமின்றியுன்னைச்சும்மாவிருக்கவைத்தா ... *
யீதொன்றும்போதாதோவின்பம்பராபரமே ... (௱௩௰)
வாயொன்றும்பேசாமௌனியாய்வந்தாண்ட ... *
தேயொன்றும்போதாதோவின்பம்பராபரமே ... (௱௩௧)
என்றுமிருந்தபடிக்கென்னையெனக்களித்த ... *
துன்றும்போதாதோவுரையாய்பராபரமே (௱௩௨)
எண்டிசைகீழ்மேலானவெல்லாம்பெருவெளியாக் ... *
கண்டவிடத்தென்னையுநான்கண்டேன்பராபரமே (௱௩௩)
பித்தனையேதும்மறியாப்பேதையெனையாண்டவுனக் ... *
கெத்தனைதான்றெண்டனிடுவேன்பராபரமே ... (௱௩௪)
தாயர்கர்ப்பத்தூடனமுந்தண்ணீருந்தந்தருளு ... *
நேயவுனையாரோநினையார்பராபரமே ... (௱௩௫)
விரிந்தமனமொடுங்கும்வேளையிறைகைப் ... *
பரந்தவருள்வாழிபதியேபராபரமே ... (௱௩௬)
சிந்தனைபோய்நானெனல்போய்த்தேக்கவின்பமாமழையை *
வந்துபொழிந்தனைநீவாழிபராபரமே ... (௱௩௭)

தந்தேனேயோர்வசனந்தந்தபடிக்கின்பமுமாய் ... *
வந்தேனேயென்றனைநீவாழிபராபரமே ... (௱௩௮)

மண்ணும்விண்ணும்வந்துவணங்காமேவாநின்னருளைக் ... *
கண்ணுறவுட்கண்டவரைக்கண்டார்பராபரமே ... (௱௩௯)

என்றுங்கருணைபெற்றவின்பத்தபோதனர்சொல்... ... *
சென்றசென்றதிக்கனைத்துஞ்செல்லும்பராபரமே ... (௱௪௰)

ஆடுவதும்பாடுவதுமானந்தமாகநின்னைத் ... ... *
தேடுவதுநின்னடியார்செய்கைபராபரமே... ... (௱௪௧)

பொங்கியநின்றண்ணருளைப்புட்கலமாப்பெற்றவர்கட் ...*
கெங்கெழுந்தென்ஞாயிறியம்பாய்பராபரமே ... (௱௪௨)

பாலரொடுபேயர்பித்தர்பான்மையெனநிற்பதுவே ... *
சீலமிகுஞானியர்தஞ்செய்கைபராபரமே ... ... (௱௪௩)

உண்டுடுத்துப்பூண்டிங்குலகத்தார்போற்றிரியுந் ... *
தொண்டர்விளையாட்டேசுகங்காண்பராபரமே ... (௱௪௪)

கங்குல்பகலற்றதிருக்காட்சியர்கள்கண்டவழி ... ... *
யெங்குமொருவழியேயெந்தாய்பராபரமே ... (௱௪௫)

காயநிலையல்லவென்றுகாண்பாருறங்குவரோ ... ... *
தூயவருட்பற்றுத்தொடர்வார்பராபரமே... ... (௱௪௬)

அப்புமுப்பும்போன்றவயிக்கியபரானந்தர்தமக் ... ... *
கொப்புவமைசொல்லவும்வாயுண்டோபராபரமே (௱௪௭)

சித்தந்தெளிந்துசிவமானோரெல்லோர்க்குங்... ... ... *
கொத்தடிமையானகுடிநான்பராபரமே ... ... (௱௪௮)

தம்முயிர்போலெவ்வுயிருந்தானென்றுதண்ணருள்கூர் ... *
செம்மையருக்கேவலென்றுசெய்வேன்பராபரமே (௱௪௯)

விண்ணுக்கும்விண்ணாகிமேவுமுனக்கியான்பூசை ... ... *
பண்ணிநிற்குமாறுபகராய்பராபரமே... ... (௱௫௰)

நெஞ்சகமேகோயினினைவேசுகந்தமன்பே ... ...*
மஞ்சனநீர்பூசைகொள்ளவாராய்பராபரமே ... ... (௱௫௧)

கெட்டவழியாணவப்பேய்கீழாகமேலான ... ... *
சிட்டருனைப்பூசைசெய்வார்பராபரமே ... ... (௱௫௨)

கால்பிடித்துமூலக்கனலைமதிமண்டலத்தின் .. ... ... *
மேலெழுப்பிற்றேகம்விழுமோபராபரமே ... ... (௱௫௩)

பஞ்சசுத்திசெய்துநின்னைப்பாவித்துப்பூசைசெய்தால். *
விஞ்சியஞானம்விளங்கும்பராபரமே... ... (௱௫௪)

அன்பர்பணிசெய்யவெனையாளாக்கிவிட்டுவிட்டா ... ! *
லின்பநிலைதானேவந்தெய்தும்பராபரமே ... (௱௫௫)

மூர்த்திதலந்தீர்த்தமுறையாற்றொடங்கினர்க்கோர் ... *
வார்த்தைசொலச்சற்குருவும்வாய்க்கும்பராபரமே (௱௫௬)
விரும்புஞ்சரியைமுதன்மெய்ஞ்ஞானநான்கு ... ... *
மரும்புமலர்காய்கனிபோலன்றோபராபரமே ... (௱௫௭)
தானந்தவந்தருமஞ்சந்ததமுஞ்செய்வர்சிவ ... ... ... *
ஞானந்தனையணையநல்லோர்பராபரமே... ... (௱௫௮)
சொன்னதைச்சொல்லித்துடிக்கின்றவாணவப்பேய்க் .. *
கின்னல்வருவதெந்நாளெந்தாய்பராபரமே ... (௱௫௯)
இன்றோவிருவினைவந்தேறியதுநானென்றோ... ... *
வன்றேவிளைந்ததன்றோவாற்றேன்பராபரமே ... (௱௬௰)
எண்ணமுந்தானின்னைவிடவில்லையென்றாலியான்முனமே ... *
பண்ணவினையேதுபகராய்பராபரமே ... (௱௬௧)
என்னையின்னதென்றறியாவேழைக்குமாகெடுவேன்... ... *
முன்னைவினைகூடன்முறையோர்பராபரமே... ... (௱௬௨)
அறியாநான்செய்வினையையையாநீகூட்டுங் ... ... *
குறியேதெனக்குளவுகூறாய்பராபரமே ... ... (௱௬௩)
என்னைக்கெடுக்கவிசைந்தவிருவினைநோய் ... .. *
தன்னைக்கெடுக்கத்தகாதோபராபரமே ... ... (௱௬௪)
வல்லமையேகாட்டுகின்றமாமாயைநானொருவ ... ... *
னில்லையெனினெங்கேயிருக்கும்பராபரமே ... (௱௬௫)
முக்குணத்தாலெல்லாமுளைக்கப்பிரகிருதித் ... ... *
திக்குணத்தைநல்கியதாரெந்தாய்பராபரமே .. ... (௱௬௬)
ஆற்றப்படாதுதுன்பமையவென்னாலென்மனது ... *
தேற்றப்படாதினியென்செய்வேன்பராபரமே ... (௱௬௭)
பூராயமாய்மனதைப்போக்கவறியாமலையோ ... ... *
யாராயலந்தேனரசேபராபரமே ... ... ...(௱௬௮)
சினமிறக்கக்கற்றாலுஞ்சித்தியெல்லாம்பெற்றாலு ... *
மனமிறக்கக்கல்லார்க்குவாயேன்பராபரமே ... (௱௬௯)
வாதுக்குவந்தெதிர்த்தமல்லரைப்போற்பாழ்த்தமன ... *
மேதுக்குக்கூத்தாடுதெந்தாய்பராபரமே ... ... (௱௭௰)
சூதாடுவார்போற்றுவண்டுதுவண்டுமனம் ... ... *
வாதாடினென்னபலன்வாய்க்கும்பராபரமே ... (௱௭௧)
கொள்ளித்தேள்கொட்டிக்குதிக்கின்றபேய்க்குரங்காய்க் ... *
கள்ளமனந்துள்ளுவதென்கண்டாய்பராபரமே .. (௱௭௨)
வந்ததையும்போனதையும்வைத்துவைத்துப்பார்த்திருந்தார் *
சிந்தையிதமகிதஞ்சேரும்பராபரமே ... (௱௭௩)

ஏறுமயிர்ப்பாலுமுணர்விந்தவிடயங்களொருப் ... *
பாறெனவுநன்றுவதிந்தேன்பராபரமே ... (௨௭௪)
பொறிவழியேயழைபொறியாயுழல்வதுநின் ... *
னறிவின்விதித்தவிதியாமோபராபரமே ... (௨௭௫)
பசுசாலங்களெல்லாம் பற்றுவிட ஞானவைவாள் ... *
வீசுநாளெந்நாள்விளம்பாய்பராபரமே ... (௨௭௬)
எந்தவுடலேனுமெடுத்தவுடனல்லதென்று ... *
சிந்தைசெயவந்ததிறஞ்செப்பாய்பராபரமே ... (௨௭௭)
பொய்யெல்லாமொன்றாய்ப்பொருத்திவைத்தபொய்யுடலை *
மெய்யென்றான்மெய்யாய்விடுமோபராபரமே ...(௨௭௮)
மின்னனையபொய்யுடலைமெய்யென்றுநம்பினையோ... *
நின்னைமறக்கைநெறியோபராபரமே ... (௨௭௯)
நித்தியமொன்றில்லாதநீர்க்குமிழிபோன்றவுடற் ... *
கித்தனைதான்துன்பமுண்டோவென்னேபராபரமே (௨௮௰)
தேகமிருமெல்றுசுடர்தேம்புவதென்னித்திரையி ... *
னூகமறிந்தாற்பயந்தானுண்டோபராபரமே ...(௨௮௧)
ஏதைச்சுமையாவெடுப்பாரெடுத்தவுடற் ... ... *
சேதமுறின்யாதுபின்னேசெல்லும்பராபரமே ...(௨௮௨)
தோற்பாவைநாலாட்சுமையாருஞ்சீவனென்றிங் ... ... *
கார்ப்பாலெடுத்ததெவராலேபராபரமே (௨௮௩)
ஞாலத்தைமெய்யெனவேநம்பிநம்பிநாளுமென்றன் ... *
காலத்தைப்போக்கியென்னகண்டேன்பராபரமே (௨௮௪)
பொய்யுலகவாழ்க்கைப்புலைச்சேரிவாதனைநின் ... ... *
மெய்யருளின்மூழ்கின்விடுங்காண்பராபரமே ... (௨௮௫)
நூலேணிவிண்ணேறநூற்குப்பருத்திவைப்பார் ... ... *
போலேசருவிதன்னூற்போதம்பராபரமே ... (௨௮௬)
சின்னஞ்சிறியார்கள்செய்தமணற்சோற்றையொக்கு ... *
மன்னுங்கலைஞானமார்க்கம்பராபரமே ... (௨௮௭)
வாசகஞானத்தால்வருமோசுகம்பாழ்த்த ... *
பூசலொன்றுபோமோபுகல்வாய்பராபரமே .. (௨௮௮)
கேட்டதையேசொல்லுங்கிளிபோலநின்னருளி ... *
னாட்டமின்றிவாய்பேசனன்றோபராபரமே ... (௨௮௯)
வெளியாயருளில்விரவுமன்பர்தேக ... *
மொளியாய்ப்பிறங்கியதுமுண்டோபராபரமே... (௨௯௰)
காலமொருமூன்றுங்கருத்திலுணர்ந்தாலுமதை ... *
ஞாலந்தனக்குரையார்நல்லோர்பராபரமே ... (௨௯௧)

கொல்லாவிரதமொன்றுகொண்டவரேநல்லோர்மற் ... *
றல்லாதாரியாரோவறியேன்பராபரமே ... (௱௯௨)
இல்லாதகாரியத்தையிச்சித்துச்சிந்தைவழி ... *
செல்லாமைநல்லோர்திறங்காண்பராபரமே ... (௱௯௩)
எதுவந்துமேதொழிந்துமென்னதியாமென்றார்கள் ... *
போதநிலைகண்டபுலத்தோர்பராபரமே ... (௱௯௪)
ஆயிரஞ்சொன்னாலுமறியாதவஞ்சநெஞ்சப் ... *
பேயமரர்கூடிற்பிழைகாண்பராபரமே ... (௱௯௫)
மாயமயக்கொழிந்தால்மற்றொன்றைநாடுவரோ ... *
நேயவருணிலையினிற்பார்பராபரமே ... (௱௯௬)
நித்திரையிற்செத்தபிணநேருமுடற்கிச்சைவையாச் ... *
சுத்தர்களேநல்லதுறவோர்பராபரமே ... (௱௯௭)
எந்நெஞ்சமேனுமிரங்குமேநின்னருட்குக் ... *
கன்னெஞ்சருமுளரோகாட்டாய்பராபரமே (௱௯௮)
மந்தவறிவாகியின்பம்வாயாதிருந்தலைந்தாற் ... *
சிந்தைமயங்காதோவென்செய்வேன்பராபரமே ... (௱௯௯)
தேடினேன்திக்கனைத்துந்தெண்டனிட்டேன்சிந்தைநைந்து *
வாடினேனென்மயக்கமாற்றாய்பராபரமே ... (௨௱)
மடிமையெனுமொன்றைமறுத்தன்றோவென்னை ... *
யடிமைகொளல்வேண்டுமரசேபராபரமே ... (௨௱௧)
காலர்பயந்தீரவின்பக்காற்கபயமென்றெழுந்த ... *
மாலைவளர்த்தனையேவாழிபராபரமே ... (௨௱௨)
நீர்புற்புதமாய்நினைவருட்கேநின்றழியப் ... *
பார்ப்பதல்லால்வேறுமொன்றைப்பாரேன்பராபரமே (௨௱௩)
நீர்க்குமிழிபோலென்னினைவுவெளியாய்க்கரையப் ... *
பார்க்குமிடமெல்லாமென்பார்வைபராபரமே (௨௱௪)
ஆடியோய்ப்பம்பரம்போலாசையுடனெங்குமுனைத் ... *
தேடியோய்கின்றேனென்செய்வேன்பராபரமே (௨௱௫)
வேதாந்தஞ்சித்தாந்தம்வேறென்றார்கண்களிக்கு ... *
நாதாந்தமோனநலமேபராபரமே ... (௨௱௬)
ஆனந்தமானநின்னையன்றியொன்றையுன்னாத ... *
மோனந்தமியேற்குமுத்திபராபரமே ... (௨௱௭)
எதுக்குமுன்னைவிடவில்லையென்றாலென்கருத்தைச் ... *
சோதிக்கவேண்டாநான்சொன்னேன்பராபரமே ... (௨௱௮)
முத்தியிலுந்தேவமிசையூவிதமாஞ்சித்திபெற்றோ ... *
ரொத்தனைபேரொன்றுனைப்பெற்றாய்பராபரமே ... (௨௱௯)

நீயன்றிநானார்நினைவாரொன்னெஞ்சகமார்... ... ... *
தாயன்றிச்சூலுமுண்டோசாற்றாய்பராபரமே ... ௨௱௰
அங்கமேநின்வடிவமானசுகர்கூட்டிடநீ ... ... *
யெங்குமேனெனென்றதென்னேபராபரமே ... ௨௱௰௧
கொள்ளைவெள்ளத்தண்ணருண்மையேற்கொண்டுசுழித்தார்த்திழுத்தாற்
கள்ளமனக்கப்பலெங்கேகாணும்பராபரமே... ... ௨௱௰௨
எக்கலையுங்கற்றுணர்ந்தோமென்றவர்க்குஞ்சம்மதஞ்சொல் *
வக்கணையாலின்பம்வருமோபராபரமே ... ... ௨௱௰௩
கல்லெறியப்பாசிகலைந்துநன்னீர்காணுநல்லோர் ... ...*
சொல்லுணரின்ஞானம்வந்துதோன்றும்பராபரமே ௨௱௰௪
நின்னையுணர்ந்தோர்கடமைநிந்தித்தபேயறிஞ ... ... *
ரென்னகதிபெறுவாரெந்தாய்பராபரமே ... ௨௱௰௫
என்னதியானென்னலற்றோரெங்கிருந்துபார்க்கினுநின் *
சன்னிதியாநீபெரியசாமிபராபரமே ... ... ௨௱௰௬
சோற்றுத்துருத்திச்சுமைசுமப்பக்கண்பிதுங்கக் ... *
காற்றைப்பிடித்தலைந்தேன்கண்டாய்பராபரமே ... ௨௱௰௭
உள்ளபடியொன்றையுணாக்கினவர்க்குள்ளுறவாய்க் ... *
கள்ளமின்றியன்பாய்க்களிப்பேன்பராபரமே ... ௨௱௰௮
அடுத்தவியல்பாகவொன்றையான்பகர்வதல்லாற் ... ...*
றொடுத்ததொன்றையான்வேண்டிச்சொல்லேன்பராபரமே ௨௱௰௯
உள்ளமறியாதொருவரொன்றையுன்னிப்பேசிலையோ ... *
துள்ளியிளங்கன்றாய்த்துடிப்பேன்பராபரமே ... ௨௱௨௰
எல்லாருமின்புற்றிருக்கநினைப்பதுவே... ... ... *
யல்லாமல்வேறொன்றறியேன்பராபரமே .. ... ௨௨௧
மூன்றுண்மெய்ஞ்ஞானமுனிவர்தவமீட்டுதல்போ... ... *
லிந்நாளிற்காணவெனக்கிச்சைபராபரமே ... ... ௨௨௨
கன்மமென்பதெல்லாங்கரிசறவேமெய்ஞ்ஞான ... ... *
தன்மநிலைசார்ந்ததன்பர்தன்மைபராபரமே ... ... ௨௨௩
கண்டுயிலாதென்னறிவின்கண்ணூடேகாட்சிபெற... ... *
மண்டியபேரொளிநீவாழிபராபரமே ... ... ௨௨௪
நானெனதன்மையென்றுநாடாமனுடவின்ப ... ...*
வானுகினின்றனைநீவாழிபராபரமே .. ... ௨௨௫
அகத்தூடணுவணுவாயண்டமெல்லாந்தானாய்... ... *
மகத்தாகிநின்றனைநீவாழிபராபரமே ... ... ௨௨௬
காரகமாங்கர்ப்பவறைக்கண்ணூடுமென்கண்ணே ... *
வாரம்வைத்துக்காத்தனைநீவாழிபராபரமே ... ௨௨௭
புரந்தோர்தந்தேசமென்பார்பூமியைப்போராடி ... *
யிறந்தோருந்தம்மதென்பாரென்னேபராபரமே ... ௨௨௮

சித்திநெறிகேட்டல்செகமயக்கஞ்சன்மமற ... *
முத்திநெறிகேட்டன்முறைகாண்பராபரமே ... ௨௬௭
சிந்தைசிதையச்சிதையாதவானந்த ... ...*
மெந்தவகையாலெவந்தெய்தும்பராபரமே ... ௨௬௮
கூர்த்தவறிவாலறியக்கூடாதெனக்குரவன் ... ... *
நேர்த்தபடிதானேதிரிந்தேன்பராபரமே ... ௨௬௯
பத்தாருந்தும்பரமசுகம்யானருந்த ... *
வெத்தனைநாள்செல்லுமியம்பாய்பராபரமே ... ௨௭௰
தீரத்திறற்றுறவுசேராமலிவ்வுலகிற் ... *
பாரத்தனம்பேசல்பண்போபராபரமே ௨௭௧
இந்தவெளியினையுண்டேப்பமிட்டபேரறிவாத் ... *
தந்தவெளிக்கேவெளியாய்ச்சார்ந்தேன்பராபரமே ௨௭௨
உணர்த்துமுனைநாடாதுணர்ந்தவையேநாடி ... *
யிணக்குறுமென்னேழைமைதானென்னேபராபரமே ... ௨௭௩
உண்டுபோலின்றுமுலகைத்திரமெனவுட் ... *
கொண்டுநான்பெற்றபலன்கூறாய்பராபரமே ... ௨௭௪
உள்ளபடியாதுமெனவுற்றுணர்ந்தேனக்கணமே ... *
கள்ளமனம்போனவழிகாணேன்பராபரமே ... ௨௭௫
சித்தமவுனஞ்செயல்வாக்கெலாமவுனஞ் ... *
சுத்தமவுனமென்பாற்றோன்றிற்பராபரமே ... ௨௭௬
எண்ணில்பலகோடியுயிரெத்தனையோவத்தனைக்குங் .. *
கண்ணிற்கலந்தவருட்கண்ணேபராபரமே ... ௨௭௭
எனக்கினியாருன்போலுமில்லையென்றால்யானு ... *
முனக்கினியனாகவுளவேன்பராபரமே... ... ௨௭௮
அண்டபிண்டங்காணனகமுப்புறமுமொன்றாக் ... *
கண்டவென்னைநீகலந்தகாலம்பராபரமே ... ௨௭௯
எத்தனையோகோடியெடுத்தெடுத்துச்சொன்னாலுஞ் ... *
சித்தமிரங்கிலையென்செய்வேன்பராபரமே ...௨௮௰
அன்றந்தநால்வருக்குமற்புதமாநீயுரைத்த ... *
தொன்றந்தவார்த்தையெனக்குண்டோபராபரமே ௨௮௧
அப்பனென்றுமன்னையென்றுமாரியனென்றும்முனையே *
செப்புவதுமுன்னிலையின்சீர்காண்பராபரமே ... ௨௮௨
கட்டுங்கனமுமந்தக்காலர்வரும்போதெதிர்த்து ... *
வெட்டுந்தளமோவிளம்பாய்பராபரமே ... ௨௮௩
பேசாதமோனநிலைபெற்றன்றோநின்னருளாம் ... *
வாசாமகோசரந்தான்வாய்க்கும்பராபரமே ... ௨௮௪
கற்றாலுங்கேட்டாலுங்காயமழியாதசித்தி ... *
பெற்றாலுமின்பமுண்டோபேசாய்பராபரமே .. ௨௮௫

கண்டவடிவெல்லாங்கனாக்கின்றவஞ்சனம்போ ... *
லண்டமெல்லாநின்னருளேயன்றோபராபரமே ௨௮௬
தஞ்செயலாலொன்றுமிலைதானென்றானென்பாவி ... *
நின்செயலாய்நில்லாநினைவேன்பராபரமே ... ௨௮௭
கொலைகளவுகட்காமங்கோபம்விட்டாலன்றோ ... *
மலையிலக்காநின்னருடான்வாய்க்கும்பராபரமே ௨௮௮
தன்னையறியாதுசகந்தானாயிருந்துவிட்டா ... *
லுன்னையறியவருமுண்டோபராபரமே ... ௨௮௯
ஒன்றிரண்டென்றன்றுணர்வுகொடுத்துள்ளபடி ... *
யென்றுமென்னைவையாயிறையேபராபரமே ... ௨௯௰
கருதுமடியார்களுளங்காணவெளியாகுந் ... ... *
துரியநிறைவானசுகமேபராபரமே ... ... ௨௯௧
பொய்குவித்தநெஞ்சனருட்பொற்பறிந்துநிக்கனைத்துங் *
கைகுவித்துநிற்பதெந்தக்காலம்பராபரமே ... ௨௯௨
அத்துவிதமானவயிக்யவனுபவமே ... ... *
சுத்தநிலையந்நிலையார்சொல்வார்பராபரமே ... ௨௯௩
வைத்தசுவரலம்பின்மண்போமோமாயையினோர்க் ... *
கெத்தனைபோதித்துமென்னுமெந்தாய்பராபரமே ௨௯௪
பூட்டற்றுத்தேகமற்றுப்போகுமுன்னேநின்னருளைப் ... *
காட்டத்தகாதோவென்கண்ணேபராபரமே ... ௨௯௫
சொல்லிற்பதர்களைந்துசொன்முடிவுகாணாதார் ... *
நெல்லிற்பதர்போலநிற்பார்பராபரமே ... ௨௯௬
அழுக்காற்றுநெஞ்சமழுங்கியபுன்மாக்க ... ... *
விழுக்காற்றாலின்பநலமெய்தார்பராபரமே ... ௨௯௭
தேகாதிபொய்யெனவேதேர்ந்தவுபசாந்தருக்கு ... *
மோகாதியுண்டோமொழியாய்பராபரமே ... ௨௯௮
சாதனையெல்லாமவிழ்த்தற்போதங்காட்டாதோர் ... *
போதனைநீநல்குவதெப்போதோபராபரமே ... ௨௯௯
ஒன்றுமறியாவிருளாமுள்ளம்படைத்தவெனக் ... *
கென்றுகதிவருவதெந்தாய்பராபரமே ... ௩௱
சிந்திக்குந்தோறுமென்னுட்சிற்சுகமாயூற்றூறிப் ... *
புந்திக்குணின்றவருட்பொற்பேபராபரமே ... ௩௱௧
என்றுமடைந்தோர்கட்கிரங்கார்குறிப்பனைத்துங் ... *
கன்றையுதைகாலிகதைகாண்பராபரமே ... ௩௱௨
குற்றங்குறையக்குணமேலிடவருளை ... ... *
யுற்றவரோயாவிற்குறவாம்பராபரமே ... ௩௱௩
ஒருவாயால்வாய்க்குமுண்மைக்கோரனந்தநூல்கோடிப் ... *
பெருவாயாற்பேசிலென்னபேறாம்பராபரமே ... ௩௱௪

சொல்லுஞ்சமயநெறிச்சுற்றுக்குளேசுழலு *
மல்லலொழிவதென்றைக்கையாபராபரமே ௫௱௫
பிடித்ததையேஸ்தாபிக்கும்பேராணவத்தை *
யடித்துத்துரத்தவல்லாரார்காண்பராபரமே ௫௱௬
நேசத்தானின்னைநினைக்குநினைவுடையா *
ராசைக்கடலிலழுந்தார்பராபரமே ௫௱௭
கள்ளாதுகட்டுணவுங்காரியமோநானொருசொற் *
கொள்ளாததோஷமன்றோகூறாய்பராபரமே ௫௱௮
சென்றவிடமெல்லாந்திருவருளேதாரகமா *
நின்றவர்க்கேயானந்தநிட்டைபராபரமே ௫௱௯
நீட்சிகுறுகலில்லாநித்யசுகாரம்பசக *
சாட்சியாமுன்னைவந்துசார்ந்தேன்பராபரமே ௫௱௰
வானுதிதத்துவமாய்மன்னிநின்றகாரணநீ *
நானுகிற்பதெந்தநாளோபராபரமே ௫௱௰௧
காட்டத்திலங்கிகடையவந்தாலென்னவுன்னு *
நாட்டத்தினூடுவந்தநட்பேபராபரமே ௫௱௰௨
நித்திரையாய்த்தானேநினைவயர்ந்தானித்தனித்தஞ் *
செத்தபிழைப்பானதெங்கள்செய்கைபராபரமே ௫௱௰௩
இன்பநிட்டையெய்தாமல்யாதெனினுஞ்சென்றுமனந் *
துன்புறுதல்வன்பிறவித்துக்கம்பராபரமே ௫௱௰௪
பொய்யகலமெய்யானபோதநிலைகண்டோர்க்கோ *
ரையமிலையையமிலையையாபராபரமே ௫௱௰௫
மந்திரத்தையுன்னிமயங்காதெனக்கினியோர் *
தந்திரத்தைவைக்கத்தகாதோபராபரமே ௫௱௰௬
விண்கருணைபூத்ததென்னமேவியுயிர்க்குயிராய்த் *
தண்கருணைதோன்றவருடாய்நீபராபரமே ௫௱௰௭
தன்மயமாய்நின்றநிலைதானேதானாகிநின்று *
சின்மயமாயெல்லாநிகழும்பராபரமே ௫௱௰௮
ஏங்கியிடையுநெஞ்சவேழையைநீவாவென்றே *
பாங்குபெறச்செய்வதுன்மேற்பாரம்பராபரமே ௫௱௰௯
ஆண்டநின்னைநீங்காவடிமைகள்யாமாணவத்தைப் *
பூண்டதென்னகன்மம்புகலாய்பராபரமே ௫௱௨௰
எங்கணுநீயென்றாலிருந்தபடியெய்தாம *
லங்குமிங்குமென்றலையலாமோபராபரமே ௫௱௨௰௧
கற்குமதுவுண்டுகளித்ததல்லாநின்னருளி *
னிற்குமதுதந்ததுண்டோநீதான்பராபரமே ௫௱௨௰௨
அண்டபகிரண்டமறியாதநின்வடிவைக் *
கண்டவராக்கண்டாற்கதியாம்பராபரமே ௫௨௫

கலக்கமுறநெஞ்சைக்கலக்கித்திருப்பத் ... ... ... *
துலக்குபவநீயலையோசொல்லாய்பராபரமே... ... ௩௨௪
சிந்தையுமென்போலச்செயலற்றடங்கிவிட்டால் ... ...*
வந்ததெலாநின்செயலாவாழ்வேன்பராபரமே... ... ௩௨௫
பந்தமெலாந்தீரப்பரஞ்சோதிநீகுருவாய் ... ... *
வந்தவடிவைமறவேன்பராபரமே... ... ... ௩௨௬
தானந்தமானசகசநிருவிகற்ப ... ... ... ... *
வானந்தநிட்டையருளையாபராபரமே... ... ... ௩௨௭
அல்லலெல்லாந்தீரவெனக்கானந்தமாகவொரு ... ... *
சொல்லையென்பால்வைத்ததையென்சொல்வேன்பராபரமே ௩௨௮
சிந்தைமயக்கமறச்சின்மயமாய்நின்றவுனைத் ... *
தந்தவுனக்கென்னையுநான்றந்தேன்பராபரமே... ... ௩௨௯
மைகாட்டுமாயைமயக்கமறநீகுருவாய்க் ... ... *
கைகாட்டவுங்கனவுகண்டேன்பராபரமே ... ... ௩௩௰
மால்வைத்தசிந்தைமயக்கறவெஞ்சென்னிமிசைக் .. ... *
கால்வைக்கவுங்கனவுகண்டேன்பராபரமே ... ... ௩௩௧
மண்ணுமாயையெல்லாமாண்டுவெளியாகவிரு ... *
கண்ணாரவுங்கனவுகண்டேன்பராபரமே... ... ௩௩௨
மண்ணீர்மையாலேமயங்காதுன்கையாலென் ... ...*
கண்ணீர்துடைக்கவுநான்கண்டேன்பராபரமே... ... ௩௩௩
உள்ளதுணராவுணர்விலிமாபாவியென்றே... ... ... *
மெள்ளமெள்ளக்கைநெகிழவிட்டாய்பராபரமே ... ௩௩௪
எல்லாநினதுசெயலென்றெண்ணுமெண்ணமுநீ ... ... *
யல்லாலெனக்குளதோவையாபராபரமே... ... ௩௩௫
பந்தமயக்கிருக்கப்பற்றொழிந்தேனென்றுளரு ... ... *
மிந்தமயக்கமெனக்கேன்பராபரமே ... ... ௩௩௬
காட்சியெல்லாங்கண்ணைவிடக்கண்டதுண்டோயாதினுக்கு *
மாட்சியுணதருளையன்றோபராபரமே ... ... ௩௩௭
எட்டுத்திசையுமொன்றுயிர்ப்பமாநின்றவுனை ... *
விட்டுப்பிரியவிடம்வேறோபராபரமே... ... ௩௩௮
பிறியாதுயிர்க்குயிராய்ப்பின்னமறவோங்குஞ் ... *
செறிவையறிவேசிவமேபராபரமே ... ... ௩௩௯
ஏதேதுசொன்னாலுமெள்ளளவுநீயிரங்காச் ... ... *
சூதேதெனக்குளவுசொல்லாய்பராபரமே ... ௩௪௰
கற்பனையாப்பாடுகின்றேன்கண்ணீருங்கம்பலையுஞ் ... *
சொற்பனத்துங்காணேனென்சொல்வேன்பராபர்மே ௩௪௧
வன்பொன்றுநீங்காமனதிறப்பமாறுப்பே ... ... *
ரன்பொன்றும்போதுமெனக்கையாபராபர்மே ... ௩௪௨

ஏதுந்தெரியாவெளியேயெனவாவெனநின் ... ... *
போதநிலைக்காட்டிபொருளேபராபரமே... ... ௱௪௩
ஓராமலெல்லாமொழிந்தேதற்குன்றெய்வவரு ... ... *
டாராதிருக்கத்தகுமோபராபரமே... ... ... ௱௪௪
மோனந்தருஞானமூட்டியெனக்குவட்டா ... ... *
வானந்தவாழ்க்கையருளாய்பராபரமே ... ... ௱௪௫
வாடுமுகங்கண்டென்னைவாடாமலேகாத்த ... ... *
நீடுங்கருணைநிறைவேபராபரமே... ... ... ௱௪௬
புந்தியினுநின்னடியைப்போற்றுகின்றமெய்யடியார் ... *
சிந்தையிறப்போதின்றியானப்பராபரமே ... ... ௱௪௭
உனக்குவமையாக்கருணையுள்ளவரும்வன்மைக் ... .. *
கெனக்குவமையானவருமில்லைபராபரமே... ... ௱௪௮
தாயிருந்தும்பிள்ளைதளர்ந்தாற்போலெவ்விடத்து ... *
நீயிருந்துநான்றளர்ந்துநின்றேன்பராபரமே ... ௱௪௯
வாயாற்கிணறுகெட்டவாரேபோல்வாய்பேசிப்... ... *
பேயானோர்க்கின்பமுண்டோபேசாய்பராபரமே ... ௱௫௰
பாவமென்றுமேலதும்பயமின்றிச்செய்யவிந்தச் ... ... *
சீவனுக்கார்போதந்தெரித்தார்பராபரமே ... ... ௱௫௧
இன்பநிருவிகற்பமின்றேதாவன்றெனிலோ ... ...*
துன்பம்பொறுப்பரிதுசொன்னேன்பராபரமே ௱௫௨
கற்குநிலைக்கற்றுக்கருவியவிழாதருளாய் ... ... *
நிற்குநிலைகற்பதுவேநீதம்பராபரமே ... ... ௱௫௩
காச்சச்சுடர்விடும்பொற்கட்டிபோனின்மலமாய்ப் ... *
பேச்சற்றவரேபிறவார்பராபரமே ... ... ௱௫௪
பற்றொழிந்துசிந்தைப்பதப்பொழிந்துதானேதா ... *
னற்றிருப்பதென்றைக்கமைப்பாய்பராபரமே ... ௱௫௫
உருவெளிதான்வாதவூருத்தமற்கல்லாலினமுங்... ... *
குருவழிநின்றார்க்குமுண்டோகூறாய்பராபரமே ... ௱௫௬
தேகமியாதேனுமொருசித்திபெறச்சீவன்முத்தி ... *
யாகுநெறிநல்லநெறியையாபராபரமே ... ... ௱௫௭
உலகநெறிபோற்சடலமோயவுயிர்முத்தி ... ... *
யிலகுமெனல்பந்தவியல்போபராபரமே ... ... ௱௫௮
பரமாப்பரவெளியாற்பார்ப்பதல்லான்மற்றெவர்க்குந் *
திரமேதுமில்லைநன்றாத்தேர்ந்தேன்பராபரமே... ... ௱௫௯
தேடுவேனின்னருளைத்தேடுமுன்னேயெய்திட ... *
மாட்டுவேனானந்தமாவேன்பராபரமே ... ... ௱௬௰
உள்ளங்குழையவுடல்குழையவுள்ளிருந்த ... ... *
கள்ளங்குழையவென்றுகாண்பேன்பராபரமே ... ௱௬௧

பட்டப்பகல்போலப்பாழ்த்தசிந்தைமாளினெல்லாம் ... *
வெட்டவெளியாகவிளங்கும்பராபரமே ... ௩௬௨
யார்க்கினனும்பாற்கிடந்தபாழ்ஞ்சிந்தைமாளினென்னை *
யார்க்குச்சரியிடலாமையாபராபரமே ... ௩௬௩
பாட்டுக்கோவன்பினுக்கோபத்திக்கோவன்பர்தங்க ... *
ணீட்டுக்கெல்லாங்குறுகிநின்றாய்பராபரமே ... ௩௬௪
முத்தாந்தவித்தேமுளைக்குநிலமாயெழுந்த ... *
சித்தாந்தமார்க்கச்சிறப்பேபராபரமே ... ௩௬௫
உன்றுவெளியாயுறங்காதபேருணர்வா ... *
யென்றுவிக்குள்ளேயிருந்தாய்பராபரமே ... ௩௬௬
தத்துவமெல்லாமகன்றதன்மயர்க்குச்சின்மயமா ... *
நித்தமுத்தசுத்தநிறைவேபராபரமே ... ௩௬௭
உள்ளக்கொதிப்பகல்வுள்ளுள்ளேயானந்த ... *
வெள்ளமலர்கருணைவேண்டும்பராபரமே ... ௩௬௮
என்னைப்புரப்பதருளின்கடனுமென்கடனு ... ... *
நின்னிற்பணியறவேநிற்கைபராபரமே ... ௩௬௯
தானேயாநன்னிலையைத்தந்தவருளானந்த ... *
வானேமனுதிதவாழ்வேபராபரமே ... ௩௭௰
மண்ணாதிபூதமெல்லாம்வைத்திருந்தநின்னிறைவைக் ... *
கண்ணாரக்கண்டுகளித்தேன்பராபரமே ... ௩௭௧
அறியாமையீதென்றறிவித்தவன்றேதான் ... ... *
பிறியாவருணிலையும்பெற்றேன்பராபரமே ... ௩௭௨
தீதெனவுநன்றெனவுந்தேர்ந்துநான்றேர்ந்தபடி ... *
யேதுநடக்கவொட்டாதென்னேபராபரமே ... ௩௭௩
கண்டவறிவகண்டாகாரமெனமெய்யறிவிற் ... *
கொண்டவர்க்கேமுத்திகொடுப்பாய்பராபரமே ... ௩௭௪
ஈறுகவல்வினைநானென்னுமலின்பசுகம் ... ... *
பேரும்படிக்கடிமைபெற்றேன்பராபரமே ... ௩௭௫
பெற்றாரனுபூதிபேசாதமோனநிலை ... ... *
கற்றாருனைப்பிரியார்கண்டாய்பராபரமே ... ௩௭௬
நீயேநானென்றுநினைப்புமறப்புமறத் ... ... *
தாயேயனையவருடந்தாய்பராபரமே ... ௩௭௭
சஞ்சலமற்றெல்லாநீதானென்றுணர்ந்தேனென் ... *
னஞ்சலியுங்கொள்ளாயரசேபராபரமே ... ௩௭௮
பூதமுதனாதவரைபொய்யென்றமெய்யரெல்லாங் ... *
காதலித்தவின்பக்கடலேபராபரமே ... ௩௭௯
வாக்குமனமொன்றுபட்டவார்த்தையல்லால்வெவ்வேறாய்ப் *
போக்குடையவார்த்தைபொருந்தேன்பராபரமே ... ௩௮௰

வன்மையின்றியெல்லாமதித்துணர்வாய்க்காகெடுவேன் ... *
றன்மையொன்றுந்தோயாத்தடையோபராபரமே ... ௩௮௧
பத்தர்சித்தர்வாழிபரிபக்குவர்கள்வாழிசெங்கோல் ... *
வைத்தவர்கள்வாழிகுருவாழிபராபரமே ... ௩௮௨
கல்லாமேதானுலுங்கற்றுணர்ந்தமெய்யடியார் ... *
சொல்லாமேநின்னைத்தொடர்ந்தேன்பராபரமே ௩௮௩
சொல்லிறப்பச்சற்குருவாய்த்தோன்றிச்சுகங்கொடுத்த ... *
நல்லுணர்க்கேகொத்தடிமைநான்காண்பராபரமே ௩௮௪
முத்திக்குவித்தானமோனக்கரும்புவழி ... ... *
தித்தித்திடவிளைந்ததேனேபராபரமே ... ... ௩௮௫
நித்திரையும்பாழ்த்தநினைவுமற்றுநிற்பதுவோ ... *
சுத்தவருணிலைநீசொல்லாய்பராபரமே ... ௩௮௬
மண்ணுமறிகடலுமற்றுளவுமெல்லாமுன் ... ... *
கண்ணிலிருக்கவுநான்கண்டேன்பராபரமே ... ௩௮௭
பூட்டிவைத்துவஞ்சப்பொறிவழியேயென்றனைநீ ... *
யாட்டுகின்றதேதோவறியேன்பராபரமே ... ௩௮௮
பொய்யுணர்வாயிந்தப்புழுக்கூட்டைக்காத்திருந்தே ... *
னுய்யும்வகையுமுளதோபராபரமே ... ௩௮௯

பராபரக்கண்ணி-முற்றுப்பெற்றது. ஆ௲௩௨௰௪.



## பைங்கிளிக்கண்ணி.

அந்தமுடனாதியளவாமலென்னறிவிற் ... *
சுந்தரவான்சோதிதுலங்குமோபைங்கிளியே ... ௧
அகமேவுமண்ணலுக்கென்னல்லலெல்லாஞ்சொல்லிச் *
சுகமானநீபோய்ச்சுகங்கொடுவாபைங்கிளியே ... ௨
ஆவிக்குளாவியெனுமற்புதனார்சிற்சுகந்தான் ... *
பாவிக்குங்கிட்டுமோசொல்லாய்நீபைங்கிளியே ... ௩
ஆருமறியாமலெனையந்தரங்கமாகவந்து ... ... *
சேரும்படியிறைக்குச்செப்பிவாபைங்கிளியே ... ௪
ஆறானகண்ணீர்க்கென்னங்கபங்கமானதையுங் ... *
கூறுதமென்னேகுதலைமொழிப்பைங்கிளியே ... ௫
இன்பருளவாடையழுக்கேறுமெமக்கண்ணல்சுத்த ... *
வம்பரமாமாடையளிப்பானேபைங்கிளியே ... ௬
உன்னுமொன்றிரண்டென்றோராமல்விட்டுநெறி ... *
சொன்னான்வரவும்வகைசொல்லாய்நீபைங்கிளியே ... ௭
ஊருமிலார்பேருமிலாருற்றார்பெற்றாருடனே ... *
யாருமிலாவென்னையறிவாரோபைங்கிளியே ... ௮

ஊனைப்பராமலெனக்குள்ளகத்துநாயகனார் ... *
சீனைப்பார்த்தாற்கருணைசெய்வாரோபைங்கிளியே ... (௯)
என்றுவிடியுமிறைவாவோவென்றென்று ... *
நின்றநிலையெல்லாநிகழ்த்தாய்நீபைங்கிளியே ... (௰)
எந்தமடலூடுமெழுதாவிறைவடிவைச் ... ... *
சிந்தைமடலாவெழுதிச்சேர்ப்பேனோபைங்கிளியே .. (௰௧)
கண்ணுண்மணிபோலின்பங்காட்டியெனைப்பிரிந்த *
திண்ணியருமின்னம்வந்துசேர்வாரோபைங்கிளியே ... (௰௨)
ஏடார்மலர்சூடேனெம்பெருமான்பொன்னடியாம் *
வாடாமலர்முடிக்குவாய்க்குமோபைங்கிளியே ... (௰௩)
கல்லேன்மலரோன்கனிந்தவன்பேபூசையென்ற ... *
நல்லோர்பொல்லாவெனையுநாடுவரோபைங்கிளியே (௰௪)
கண்டதனைக்கண்டுகலக்கந்தவிரெனவே ... ... *
விண்டபெருமானையுநான்மேவுவனோபைங்கிளியே (௰௫)
காணாதகாட்சிகருத்துவந்துகாணாமல் ... ... *
வீணாள்கழித்துமெலிவனோபைங்கிளியே ... (௰௬)
காந்தமிரும்பைக்கவர்ந்திழுத்தாலென்னவருள் ... *
வேந்தனெனையிழுத்துமேவுவனோபைங்கிளியே ... (௰௭)
காதலால்வாடினதுங்கண்டனையேயெம்மிறைவர் ... *
போதரவாயின்பம்புசிப்பேனோபைங்கிளியே ... (௰௮)
கிட்டிக்கொண்டன்பருண்மைகேளாப்பலவடிகொள் ... *
பட்டிக்குமின்பமுண்டோசொல்லாய்நீபைங்கிளியே (௰௯)
கிட்டேராய்நெஞ்சிற்கிளர்வார்தழுவவென்று ... *
னெட்டேராவரவர்நேசமென்னோபைங்கிளியே ... (௨௰)
கூறுங்குணமுமில்லாக்கொள்கையினோன்கவலை ... *
யாறும்படிக்குமணைவாரோபைங்கிளியே ... (௨௧)
சின்னஞ்சிறியேன்றன்சிந்தைகவர்ந்தாரிறைவர் ... *
தன்னந்தனியேதவிப்பேனோபைங்கிளியே ... (௨௨)
சிந்தைமருளைத்தெளிவித்தெனையாள ... ... *
வந்தகுருநாதனருள்வாய்க்குமோபைங்கிளியே (௨௩)
சொல்லிறந்துநின்றசுகரூபபெம்மானை ... *
யல்லும்பகலுமணைவேனோபைங்கிளியே ... (௨௪)
தற்போதத்தாலேதலைகீழதாகவைய ... ... *
னற்போதவின்புவரநாட்செலுமோபைங்கிளியே (௨௫)
தன்னையறியுந்தருணந்தனிற்றலைவ ... ... *
ரென்னையணையாதவண்ணமென்கொளித்தார்பைங்கிளியே (௨௬)
தாங்கரியமையலெல்லாந்தந்தெனைவிட்டின்னருளாம் ... *
பாங்கியைச்சேர்ந்தாரிறைக்குப்பண்போசொல்பைங்கிளியே(௨௭)

தாவியதோர்மர்க்கடமாந்தன்மைவிட்டேயண்ணலிடத் ... *
தோவியம்போனிற்கினெனையுள்குவனோபைங்கிளியே (௨௮)
தீராக்கருவழக்கைத்தீர்வையிட்டங்கெனையினிப் ... *
பாரோருதாண்டானைப்பற்றுவனோபைங்கிளியே ... (௨௯)
தூங்கிவிழித்தென்னபலன்றூங்காமற்றூங்கிநிற்கும் ... *
பாங்குகண்டாலன்றோபலன்காண்பேன்பைங்கிளியே (௩௰)
தொல்லைக்கவலைதொலைத்துத்தொலையாத ... *
வெல்லையிலாவின்பமெய்துவனோபைங்கிளியே (௩௧)
நன்னெஞ்சத்தன்பரெல்லாநாதனைச்சேர்ந்தின்பணைந்தார் *
வன்னெஞ்சத்தாலேநான்வாழ்விழந்தேன்பைங்கிளியே (௩௨)
நானேகருதின்வரநாடார்சும்மாவிருந்தாற் .. *
றானேயணைவரவர்தன்மையென்னோபைங்கிளியே ... (௩௩)
நீர்க்குமிழிபோன்றவுடனிற்கையிலேசாகுவதுஞ் ... *
சேர்க்கவறியாமற்றிகைப்பேனோபைங்கிளியே ... (௩௪)
நெஞ்சகத்தில்வாழ்வார்நினைக்கின்வேறென்றனையார் *
வஞ்சகத்தாரல்லரவர்மார்க்கமென்னோபைங்கிளியே ... (௩௫)
பன்முத்திரைச்சமயம்பாழ்படக்கல்ல லடிவாள் ... *
சின்முத்திரையரசைச்சேர்வனோபைங்கிளியே ... (௩௬)
பச்சைகண்டநாட்டிற்பறக்குமுனைப்போற்பறந்தே ... *
னிச்சையெல்லாமண்ணற்கியம்பிவாபைங்கிளியே ... (௩௭)
பாசபந்தஞ்செய்ததுன்பம்பாராமலெம்மிறைவ ... *
ராசைதந்ததுன்பமதற்காற்றேனென்பைங்கிளியே ... (௩௮)
பாராசையற்றிறையைப்பற்றறநான்பற்றிநின்ற ... *
பூராயமெல்லாம்புகன்றுவாபைங்கிளியே ... (௩௯)
பேதைப்பருவத்தேபின்றொடர்ந்தென்பக்குவமுஞ் ... *
சோதித்தவண்ணல்வந்துதோய்வாரோபைங்கிளியே (௪௰)
பைம்பயிரைநாடுமுன்போற்பார்பூத்தபைங்கொடிசேர் ... *
செம்பயிரைநாடித்திகைத்தேனென்பைங்கிளியே ... (௪௧)
பொய்க்கூடுகொண்டுபுலம்புவனோவெம்மிறைவர் ... *
மெய்க்கூடுசென்றுவிளம்பிவாபைங்கிளியே ... (௪௨)
பொய்ப்பணிவேண்டேனைப்பொருட்படுத்தியண்ணலென்பால் *
மெய்ப்பணியுந்தந்தொருகால்மேவுவனோபைங்கிளியே (௪௩)
மண்ணுறங்கும்விண்ணுறங்குமற்றுளவெலாமுறங்குங் ... *
கண்ணுறங்கேனெம்மிறைவர்காதலாற்பைங்கிளியே (௪௪)
மட்டுப்படார்தமயக்கமெல்லாந்தீரவென்னை ... *
வெட்டவெளிவீட்டிலண்ணன்மேவுவனோபைங்கிளியே (௪௫)
மாலைவளர்த்தென்னைவளர்த்திறைவர்பன்னெறியாம் ... *
பாலைவனத்தில்விட்டபாவமென்னோபைங்கிளியே ... (௪௬)

மெய்யினைய்மாற்றவுந்தமெத்தவுண்டேமண்ணறந்த *
மையமனைய்தீர்க்கமருந்துமுண்டோபைங்கிளியே (௪௭)
மேவுபஞ்சவண்ணமுற்றாய்விண்சிறையாலல்லலுற்றாய் *
பாவிபஞ்சவண்ணம்பகர்ந்துவாபைங்கிளியே ... (௪௮)
வாய்திறவாவண்ணமெனைவைத்தாண்டார்க்கென்றயனா *
நீதிறவாச்சொல்லினிசமாங்காண்பைங்கிளியே .. (௪௯)
வாட்டப்படாதமவுனவின்பங்கையாலே ... ... *
காட்டிக்கொடுத்தானைக்காண்பேனோபைங்கிளியே ... (௫௰)
வாராவரவாகவந்தருளுமோனருக்கென் ... ... *
பேராசையெல்லாம்போய்ப்பேசிவாபைங்கிளியே (௫௧)
விண்ணவர்தம்பாலமுதம்வேப்பங்காயாகவென்பாற் ... *
பண்ணியதெம்மன்னமயல்பார்த்தாயோபைங்கிளியே (௫௨)
விண்ணுள்வெளியடங்கிவேறற்றதென்னவருட் ... *
கண்ணுளடங்கிடவுங்காண்பேனோபைங்கிளியே ... (௫௩)
விண்ணூர்நிலவுதவழ்மேடையிலெல்லாருமுற ... *
மன்னனவீட்டிலென்னைவைத்ததென்னோபைங்கிளியே (௫௪)
உள்ளத்தினுள்ளேயொளித்திருந்தென்கள்ளமெல்லாம் ... *
வள்ளலறிந்தாலெனக்குவாயுமுண்டோபைங்கிளியே (௫௫)
ஆகத்தைநீக்குமுன்னேயாவித்துணைவனைநான் *
மோகத்தின்வண்ணந்தழுவுவனோபைங்கிளியே ... (௫௬)
தானேசுபாவந்தலைப்படநின்றான்ஞான ... *
வானனவரும்வருவாரோபைங்கிளியே ... (௫௭)
கள்ளத்தலைவரவர்கைகாட்டிப்பேசாம ... *
லுள்ளத்தில்வந்தவுபாயமென்னோபைங்கிளியே ... (௫௮)

பைங்கிளிக்கண்ணி-முற்றுப்பெற்றது. ஆக ௮௰௨.

## எந்நாட்கண்ணி.

### தெய்வவணக்கம்.

நீர்பூத்தவேணிநிலவெறிப்பமன்றாடுங் ... ... *
கார்பூத்தகண்டனையான்காணுநாளெந்நாளோ ... (௧)
பொன்னுருமன்றன்மணிப்பூவைவிழிவண்டுசுற்று ... *
மென்னாரமுதினலமிச்சிப்பதெந்நாளோ ... (௨)
நீக்கமலக்கட்டறுத்துநேரேவெளியிலெம்மைத் ... *
தூக்கிவைக்குந்தாளைத்தொழுதிடுநாளெந்நாளோ ...(௩)
கருமுகங்காட்டாமலென்றுங்கர்ப்பூரம்வீசுந் ... *
திருமுகமேநோக்கித்திருக்கறுப்பதெந்நாளோ (௪)
வெஞ்சேலெனும்விழியார்வேட்கைநஞ்சுக்கஞ்சினனா ... *
யஞ்சேலெனுங்கைக்கபயமென்பதெந்நாளோ ... (௫)

ஆறுசமயத்துமதுவதுவாய்நின்றிலங்கும் ... ... *
வீறுபராதிருத்தாண்மேவுநாளெந்நாளோ ... (௬)
பச்சைநிறமாய்ச்சிவந்தபாகங்கலந்துலகை ... *
யிச்சையுடனீன்றளையாங்காண்பதெந்நாளோ ... (௭)
ஆதியந்தங்காட்டாதகண்டிதமாய்நின்றுணர்த்தும் ... *
போதவடிவானடியைப்போற்றுநாளெந்நாளோ... (௮)
கங்கைநிலவுசடைக்காட்டானைத்தந்தையெனும் ... *
புங்கவெண்கோட்டானைபதம்புந்திவைப்பதெந்நாளோ (௯)
அஞ்சுமுகங்காட்டாமலாறுமுகங்காட்டவந்த ... ... *
செஞ்சரணச்சேவடியைச்சிந்தைவைப்பதெந்நாளோ ... (௰)
தந்தையிருதாடுணித்துத்தம்பிரான்றாள்சேர்ந்த ... *
வெந்தையிருதாளிணைக்கேயின்புறுவதெந்நாளோ ... (௰௧)

முற்றிற்று - ஆகூ துகரு.

---

## குருமரபின்வணக்கம்.

துய்யகரமலராற்சொல்லாமற்சொன்னவுண்மை ... *
யையனைக்கல்லாலரசையாமணைவதெந்நாளோ ... (௧)
சிந்தையினுக்கெட்டாதசிற்சுகத்தைக்காட்டவல்ல ... *
நந்தியடிக்கீழ்க்குடியாய்நாமணைவதெந்நாளோ ... ...(௨)
எந்தைசனற்குமரனாதியெமையாட்கொள்வான் ... *
வந்ததவத்தினரைவாழ்த்துநாளெந்நாளோ ... (௩)
பொய்கண்டார்காணப்புனிதமெனுமத்துவித ... ... *
மெய்கண்டநாதனருண்மேவுநாளெந்நாளோ ... (௪)
பாதிவிருத்தத்தாலிப்பார்விருத்தமாகவுண்மை ... *
சாதித்தார்பொன்னடியைத்தாம்பணிவதெந்நாளோ ... (௫)
சிற்றம்பலமன்னுஞ்சின்மயராந்தில்லைநகர்க் ... *
கொற்றங்குடிமுதலைக்கூறுநாளெந்நாளோ ... ... (௬)
குறைவிலருண்ஞானமுதல்கொற்றங்குடியடிக ... *
ணறைமலர்த்தாட்கன்புபெற்றுநாமிருப்பதெந்நாளோ (௭)
நாளவங்கள்போகாமனன்னெறியைக்காட்டியெமை ... *
யாளவந்தகோலங்கட்கன்புவைப்பதெந்நாளோ ... ...(௮)
என்னறிவையுள்ளடக்கியென்போல்வருமவுனி ... *
தன்னறிவுக்குள்ளேநான்சாருநாளெந்நாளோ ...(௯)
ஆறுளொன்றுநாடினதற்காறுமுண்டாமென்றெமக்குக் *
கூறுமவுனியருள்கூடுநாளெந்நாளோ ... (௰)
நில்லாமநின்றருளைநேரேபாரென்றவொரு ... *
சொல்லான்மவுனியருடோற்றுநாளெந்நாளோ... ...(௰௧)

வைதிகமாஞ்சைவமவுனமவுனத்தளித்த ... ... ... *
மெய்த்திகழ்ந்தென்னல்லல்விடியுநாளெந்நாளோ ... ௰௨
வாக்குமனமற்றமவுனமவுனத்தருளே ... ... *
தாக்கவுமென்னல்லலெல்லாந்தட்டழிவதெந்நாளோ... ௰௩

முற்றிற்று - ஆக ௩௱௬.

## அடியார் வணக்கம்.

வெப்பந்தந்தீர்த்துலகாள்வேந்தன்றிருஞான ... *
சம்பந்தனையருளாற்சாருநாளெந்நாளோ ... ... ௧
ஏரின்சிவபோகமிங்கிவர்க்கேயென்னவுழ... ... ... *
வாரங்கொள்செங்கையர்தாள்வாரம்வைப்பதெந்நாளோ ... ௨
பித்தரிறையென்றறிந்தும்பேதைபாற்றூதனுப்ப ... ... *
வித்தகத்தமிழ்ச்சமர்த்தர்மெய்ப்புகழ்வதெந்நாளோ ... ... ௩
போதவூர்நாடறியப்புத்தர்தமைவாதில்வென்ற ... *
வாதவூரையனன்பைவாஞ்சிப்பதெந்நாளோ ... ௪
ஒட்டிடும்பற்றின்றியுலகைத்துறந்தசெல்வப் ... ... *
பட்டினத்தார்பத்ரகிரிபண்புணர்வதெந்நாளோ ... ... ௫
கண்டதுபொய்யென்றகண்டாகாரசிவமெய்யெனவே *
விண்டசிவவாக்கியர்தாள்மேவுநாளெந்நாளோ ... ௬
சக்கரவர்த்தித்தவராசயோகியென ... ... *
மிக்கதிருமூலனருண்மேவுநாளெந்நாளோ... ... ௭
கந்தரநுபூதிபெற்றுக்கந்தரநுபூதிசொன்ன ... *
வெந்தையருணாடியிருக்குநாளெந்நாளோ ... ... ௮
எண்ணரியசித்தரிமையோர்முதலான... ... *
பண்ணவர்கள்பத்தருள்பாலிப்பதெந்நாளோ... ... ௯

முற்றிற்று - ஆக ௩௱௰௫.

---

## யாக்கையைப்பழித்தல்.

சுக்கிலமுநீருஞ்சொரிமலமுநாறுமுடற் ... ... *
பக்குழுவும்வாஞ்சையினிப்போதுமென்பதெந்நாளோ ... ௧
நீர்க்குமிழிபூணமைத்துநின்றுநில்லாமெய் ... ... *
பார்க்குமிடத்திதன்மேற்பற்றறுவதெந்நாளோ ... ௨
காக்கைநரிசெந்நாய்கழுகொருநாள்கூடியுண்டு ... ... *
தேக்குவிருந்தாமுடலைச்சீயென்பதெந்நாளோ... ... ௩
செங்குருதியாதிசெனித்தசென்மபூமியினை ... ... *
யிங்கெனுடலென்னுமிழுக்கொழிவதெந்நாளோ... ... ௪
தத்துவர்தொண்ணூற்றறுவர்தாமாய்வாழ்ந்நாட்டைப் ... *
பித்தனெனென்னும்பிதற்றொழிவதெந்நாளோ ... ... ௫

உடனொன்றிநாதனுணர்த்துமலதவிட்டறிவே... ... ... *
னென்றபாவிதலைநாணுநாளெந்நாளோ ... ... ௫
மேவலையிலாமேவதன்விதித்தவிந்திரசாலவுடன் ... ...*
மாலைவியாபாரமயக்கொழிவதெந்நாளோ ... ... ௭
ஆழ்ந்துநினைக்கினரோசிகமாமிவ்வுடலில்... ... *
வாழ்ந்துபெறும்பேற்றைமதிக்குநாளெந்நாளோ ... ௮
மும்மலச்சேருனமுழுக்கும்பியாகமெனு... ... *
பிம்மலகாயத்துனிகழ்ச்சிவைப்பதெந்நாளோ ... ௯
நாற்றமிகக்காட்டுநவவாயில்பெற்றபசுஞ் ... ... *
சோற்றுத்துருத்திசுமைமையென்பதெந்நாளோ ... ... ௰.
உருவிருப்பவுள்ளேதானூறுமலக்கேணி ... ... *
யருவருப்புவாழ்க்கையைக்கண்டஞ்சுநாளெந்நாளோ ... ௰௧

முற்றிற்று - ஆகூ தூ௱௨௫.

---

## மாதரைப்பழித்தல்.

மெய்வீசுநாற்றமெல்லாமிக்கமஞ்சளான்மறைத்துப்... ... *
பொய்வீசும்வாயார்புலையொழிவதெந்நாளோ... ... ௧
திண்ணியநெஞ்சப்பறவைசிக்கக்குழற்காட்டிற் ... ... *
கண்ணிவைப்பார்மாயங்கடக்குநாளெந்நாளோ ... ௨
கண்டுமொழிபேசிமனங்கண்டுகொண்டுகைவிலையாக் ... *
கொண்டுவிடுமாதர்பொய்க்கூத்தொழிவதெந்நாளோ ... ௩
காமனைவாவென்றிருண்டகண்வலையைவீசுமின்னார்... ... *
நாமமறந்தருளைநண்ணுநாளெந்நாளோ ... ... ௪
கண்களில்வெண்பூளைகரப்பக்குருபையிட்ட... ... ...*
பெண்கண்மயறப்பிப்பிழைக்குநாளெந்நாளோ... ... ௫
வீங்கித்தளர்ந்துவிழுமுலையார்மேல்வீழ்ந்து ... *
தூங்குமதன்சோம்பைத்துடைக்குநாளெந்நாளோ ... ௬
கச்சிருக்குங்கொங்கைகரும்பிருக்குமின்மாற்றம்... ... *
வைச்சிருக்குமாதர்மயக்கொழிவதெந்நாளோ... ... ௭
பச்சென்றகொங்கைப்பசப்பியர்பாழானமய ... *
லச்சென்றறிந்தருளைநண்ணுநாளெந்நாளோ ... ... ௮
உந்திச்சுழியாலுளத்தைச்சுழித்தகனை ... ... *
தந்தித்தனத்தார்தமைமறப்பதெந்நாளோ ... ... ௯
தட்டுவைத்தசேலைகொய்சகத்திற்சிந்தையெல்லாங்... ... *
கட்டிவைக்குமாய்மின்னார்கட்டழிவதெந்நாளோ ... ௰
ஆழாழியென்னவளவுபடாவஞ்சநெஞ்சப் ... *
பாழானமாதர்மயற்பற்றொழிவதெந்நாளோ ... ௰௧

தூயபனித்திங்கள்சுடுவதெனப்பிற்தேற்று ... *
மாயமடவார்மயக்கொழிவதெந்நாளோ ... (௰௨)
ஏழைக்குறும்புசெயுமேந்திழையார்மோகமெனும் ... *
பாழைக்கடந்துயயிராவதெந்நாளோ ... ... (௰௩)
விண்டுமொழிகுளறிவேட்கைமதுமொண்டுதிருந் ... *
தொண்டியர்கள்கட்கடையிற்சுற்றொழிவதெந்நாளோ (௰௪)
மெய்யிற்சிவப்பிறக்கமேவுமின்பம்பொன்மாதர் ... *
பொய்யிலின்பின்னென்றும்பொருந்தாநாளெந்நாளோ (௰௫)

முற்றிற்று-ஆ௲காசுக.

---

## தத்துவமுறைமை.

ஐம்பூதத்தாலேயலக்கழிந்ததோஷமற ... ... *
வைம்பூதநாதனருளெய்துநாளெந்நாளோ ... (௧)
சத்தமுதலாம்புலனிற்சஞ்சரித்தகள்வரெனும் ... *
பித்தர்பயந்தீர்ந்துபிழைக்குநாளெந்நாளோ ... (௨)
நாளும்பொறிவழியைநாடாதவண்ணமெமை ... *
யாளும்பொறியாலருள்வருவதெந்நாளோ ... (௩)
வாக்காதியானகன்மமாயைதப்பால்விலகாலம் ... *
போக்காமலுண்மைபொருந்துநாளெந்நாளோ ... (௪)
மனமானவானரக்கைம்மாலையாகாம ... ... *
லெனையாளடிகளடியெய்துநாளெந்நாளோ ... (௫)
வேட்டைப்புலப்புலையர்மேவாதவண்ணமெனக் ... *
காட்டைத்திருத்திக்களைகாண்பதெந்நாளோ ... (௬)
உந்துபிறப்பிறப்பையுற்றுவிடாதெந்தையருள் ... *
வந்துபிறக்கமனமிறப்பதெந்நாளோ ... (௭)
புத்தியெனுந்துத்திப்பொறியரவின்வாய்த்தேரை ... *
யொத்துவிடாதெந்தையருளோங்குநாளெந்நாளோ (௮)
ஆங்காரமென்னுமதயானைவாயிற்கரும்பா ... ... *
யேங்காமலெந்தையருளெய்துநாளெந்நாளோ ... (௯)
சித்தமெனும்பௌவத்திரைக்கடலில்வாழ்துரும்பாய் ... *
நித்தமலையாதருளினிற்குநாளெந்நாளோ ... ... (௰)
வித்தியாதத்துவங்களேழும்வெருண்டோடச் ... *
சுத்தபரபோகத்தைத்துய்க்குநாளெந்நாளோ ... (௰௧)
சுத்தவித்தையேமுதலாத்தோன்றுமோரைந்துவகைத் ...*
தத்துவத்தைநீங்கியருள்சாருநாளெந்நாளோ ... (௰௨)
பொல்லாதகாமப்புலைத்தொழிலிலென்னறிவு ... *
செல்லாமனன்னெறியிற்சேருநாளெந்நாளோ (௰௩)

அடிகளடிக்கீழ்க்குடியாய்யாம்வாழாவண்ணங் ... *
குடிகெடுக்கும்பாழ்மடிமைக்கூறொழிவதெந்நாளோ (௰௪)
ஆணவபுறக்கருவியாறுபற்றுமற்றவையும் ... ... *
போனவழியுங்கூடப்புன்முளைப்பதெந்நாளோ ... (௰௫)
அந்தகனுக்கெங்குமிருளானவாறுவறிவில் ... ... *
வந்தவிருள்வேலைவடியுநாளெந்நாளோ ... ௰௬
புன்மலத்தைச்சேர்ந்துமலபோதம்பொருந்துதல்போய் *
நின்மலத்தைச்சேர்ந்துமலநீங்குநாளெந்நாளோ ௰௭
கண்டுகண்டுந்தேறுக்கலக்கமெல்லாந்தீர்வண்ணம் ... *
பண்டைவினைவேரறப்பறிக்குநாளெந்நாளோ ... ௰௮
பைங்கூழ்வினைதான்படுசாவியாகவெமக் ... ... *
செங்கோன்கிரணவெயிலெட்டுநாளெந்நாளோ ௰௯
குறித்தவிதமாறியாற்கூட்டும்வினையெல்லாம் ... *
வறுத்தவித்தாம்வண்ணமருள்வந்திடுநாளெந்நாளோ ௨௰
சஞ்சிதமேயாதிசரக்கானமுச்சேறும் ... ... *
வெந்தபொறியாகவருண்மேவுநாளெந்நாளோ ... ௨௧
தேகமுதனுன்காத்திரண்டொன்றாய்நின்றிலகு ... *
மோகமிகுமாயைமுடியுநாளெந்நாளோ ... ௨௨
சுத்தமுதலாதவைநத் திங்கெமக்குணர்த்துஞ் ... *
சுத்தமாமாயைதொடக்கறுவதெந்நாளோ ... ௨௩
எம்மைவினையையிறையையெப்பார்காட்டாத ... *
வம்மைதிரோதையகலுநாளெந்நாளோ ... ௨௪
நித்திரையாய்வந்துநினைவழிக்குங்கேவலமாஞ் ... *
சத்துருவைவெல்லுஞ்சமர்த்தறிவதெந்நாளோ ௨௫
சன்னல்பின்னலானசகலமெனுங்குப்பையிடை ... *
முன்னவன்ஞானக்கனலைமூட்டுநாளெந்நாளோ ௨௬
மாயாவிகாரமலமொழிசுத்தாவத்தை ... ... *
தோயாவருளைத்தொடருநாளெந்நாளோ ... ௨௭

முற்றிற்று-ஆ. ௱௧௮.

## தன்னுண்மை.

உடம்பறியுமென்னுமந்தவூழலெல்லாந்தீரத் ... *
இடம்பெறவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ ... (௧)
செம்மையறிவாலறிந்துதேசாதிக்குள்ளிசைந்த ... *
வெம்மைப்புலப்படவேயாமறிவதெந்நாளோ ... (௨)
தத்துவமாம்பாழ்த்தசடவுருவைத்தாள்சுமந்த ... *
சித்துருவாமெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ (௩)
பஞ்சப்பொறியையுயிரொன்னுமந்தப்பஞ்சமறச் ... *
செஞ்சேவேயெம்மைத்தெரிசிப்பதெந்நாளோ ... (௪)

அந்தக்கரணமூபிராமையென்றவந்தாங்க ... ... *
சிந்தைக்கணைதிருமெய்ம்மைதேர்ந்தறிவதெந்நாளோ... (௫)
முக்குணத்தைச்சிவனென்னுமுடத்தைவிட்டருளா ... *
லக்கணமேமெய்ம்மையறிந்துகொள்வதெந்நாளோ ... (௬)
காலையுயிரொன்றுங்கலாதிகள்சொற்களாமற் ... *
சிலமுடனெம்மைத்தெளிந்துகொள்வதெந்நாளோ ... (௭)
வான்கெடுத்துத்தேடுமந்தேடர்போலவெமை ... *
நான்கெடுத்துத்தேடாமனன்கறிவதெந்நாளோ ... (௮)

முற்றிற்று - அ. காஎசு.

## அருளியல்பு.

ஞானந்தருநாடிநமக்குவேண்டாமென் ... ... *
றானந்தநாட்டிலவதரிப்பதெந்நாளோ ... (௧)
பொய்க்காட்சியானபுவனத்தைவிட்டருளா ... ... *
மெய்க்காட்சியாம்புவன்மேவுநாளெந்நாளோ ... (௨)
ஆதியந்தங்காட்டாமலம்பாய்போலநிறைந்த ... *
நீதிலருட்கடலைச்சேருநாளெந்நாளோ ... ... (௩)
எட்டுத்திசைக்கிழுமேலெங்கும்பெருகிவரும் ... *
வெட்டவெளியின்னாற்றின்மெய்த்தோய்வதெந்நாளோ (௪)
நூதானமென்றுசுருதியெல்லாமோலமிடு ... *
மீதானமானவெற்பைமேவுநாளெந்நாளோ ... (௫)
வெந்துவெடிக்கின்றசிந்தைவெப்பகலத்தண்ணருளாய் *
வந்துபொழிகின்றமழைகாண்பதெந்நாளோ ... (௬)
சூரியர்கள்சந்திரர்கடோன்றச்செயுஞ்சோதிப் ... ... *
பூரணதேயத்திற்பொருந்துநாளெந்நாளோ (௭)
கன்றுமனவெப்பக்கலக்கமெலாந்தீரவருட் ... ... *
டென்றல்வந்துவீசுவெளிசேருநாளெந்நாளோ ... (௮)
கட்டுநமன்செங்கோல்கடாவடிக்குங்கோலாக ... *
வெட்டவெளிப்பொருளைமேவுநாளெந்நாளோ ... (௯)
சாலக்கபாடத்தடைதீரவெம்பெருமா ... ... *
னோலக்கமண்டபத்துளோடுநாளெந்நாளோ ... (௰)
விண்ணவன்றுமொன்றும்விரிநிலாமண்டபத்திற் ... *
றண்ணீரருந்தித்தளர்வொழிவதெந்நாளோ ... (௰௧)
வெய்யபுவிபார்த்துவிழித்திருந்தவல்லறத் ... *
துய்யவருளிற்றுயிலுநாளெந்நாளோ ... (௰௨)
வெய்யபிறவிவெயில்வெப்பமெலாம்விட்டகல *
வையனடிநீழலணையுநாளெந்நாளோ ... (௰௩)
வாதைப்பிறவிவலைகடலைநீந்தவையன் ... *
பாதைப்புணையிணையைப்பற்றுநாளெந்நாளோ... ...(௰௪)

ஈனமில்லாமெய்ப்பொருளையிம்மையிலேகாணவெளி... *
ஞானமெனுமஞ்சனத்தைநான்பெறுவதெந்நாளோ ௰௫
எல்லாமிறந்தவிடத்தெந்தைநிறைவாம்வடிவைப் ... *
புல்லாமற்புல்லிப்புணருநாளெந்நாளோ ... ௰௬
சடத்துளுயிர்போலெமக்குத்தானுயிராய்ஞான ... *
நடத்துமுன்றகன்டுபணிநாம்விடுவதெந்நாளோ ... ... ௰௭
எக்கணுமாந்துன்பவிருட்கடலைவிட்டருளா ... *
மிக்ககரையேறிவெளிப்படுவதெந்நாளோ ... ௰௮

முற்றிற்று-ஆ௨காஎ௬௪.

# பொருளியல்பு.

கைவிளக்கின்பின்னேபோய்க்காண்பார்போன்மெய்க்குருஞான *
மெய்விளக்கின்பின்னேபோய்மெய்காண்பதெந்நாளோ ... ௧
கேடில்பசுபாசமெல்லாங்கீழ்ப்படவுந்தானேமே ... *
லாடுஞ்சுகப்பொருளுக்கன்புறுவதெந்நாளோ ... ௨
ஆணவத்தைநீக்கியறிவூடேயைவகையாக் ... *
காணவத்தைக்கப்பாலைக்காணுநாளெந்நாளோ ... ௩
நீக்கப்பிரியாநினைக்கமறக்கக்கூடாப் ... ... *
போக்குவரவற்றபொருளணைவதெந்நாளோ ... ௪
அண்டருக்குமெய்ப்பில்வைப்பாமாரமுதையென்னகத்திற் *
கண்டுகொண்டுநின்றுகளிக்குநாளெந்நாளோ ... ௫
காட்டுந்திருவருளைக்கண்ணாகக்கண்டுபர ... ... *
வீட்டின்பமெய்ப்பொருளைமேவுநாளெந்நாளோ ... ௬
நானானதன்மைநழுவியேயெவ்வுயிர்க்குந் ... ... *
தானானவுண்மைதனைச்சாருநாளெந்நாளோ .. ௭
சிந்தைமறந்துதிருவருளாய்நிற்பவர்பால் ... ... *
வந்தபொருளெம்மையுந்தான்வாழ்விப்பதெந்நாளோ ௮
எள்ளுக்குளெண்ணெய்போலெங்கும்வியாபகமா ... *
யுள்ளவொன்றையுள்ளபடியோருநாளெந்நாளோ ... ௯
அருவுருவமெல்லாமகன்றதுவாயான .. ... *
பொருளெமக்குவந்துபுலப்படுவதெந்நாளோ ... ... ௰
ஆரணமுங்காணாவகண்டிதாகாரபரி ... *
பூரணம்வந்தெம்மைப்பொருந்துநாளெந்நாளோ ... ௰௧
சத்தொடுசித்தாகித்தயங்கியவானந்தபரி ... *
சுத்தவகண்டசிவந்தோன்றுநாளெந்நாளோ ... ௰௨
எங்கெங்கும்பார்த்தாலுமின்புருவாய்நீக்கமின்றித் ... *
தங்குந்தனிப்பொருளைச்சாருநாளெந்நாளோ ... ௰௩
அடிமுடிகாட்டாதசுத்தவம்பரமாஞ்சோதிக் ... *
கடுவெளிவந்தென்னைக்கலக்குநாளெந்நாளோ ... ௰௪

ஒன்றனையுங்காட்டாவுளத்திருளைச்சூறையிட்டு ... *
நின்றபரஞ்சோதியுடனிற்குநாளெந்நாளோ ... ௰௫
எந்தச்சமயமிசைந்துமறிவூடறிவாய் ... ... *
வந்தபொருளேபொருளாவாஞ்சிப்பதெந்நாளோ ... ௰௬
எவ்வாறிங்குற்றுணர்ந்தார்யாவரவர்தமக்கே ... *
யவ்வாறாய்நின்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ ... ௰௭
பெண்ணாணலியெனவும்பேசாமலென்னறிவின் ... ... *
கண்ணூடேநின்றவொன்றைக்காணுநாளெந்நாளோ ... ௰௮
நினைப்புமறப்புமறநின்றபரஞ்சோதி ... ... ... *
தனைப்புலமாவென்னறிவிற்சந்திப்பதெந்நாளோ ... ௰௯

முற்றிற்று - ஆக ௲௨௱௰௫.

# ஆனந்தவியல்பு.

பேச்சுமூச்சில்லாதபேரின்பவெள்ளமுற்று ... *
நீச்சுநிலைகாணுமதிற்குநாளெந்நாளோ ... ... ௧
சித்தந்தெளிந்தோர்தெளிவிற்றெளிவான ... ... *
சுத்தசுகக்கடலூட்டோயுநாளெந்நாளோ ... ... ... ௨
சிற்றின்பமுண்மீழ்சிதையவனந்தங்கடல்போன் ... ... *
முற்றின்பவெள்ளமெமைமூடுநாளெந்நாளோ ... ௩
எல்லையில்பேரின்பமயமெய்ப்படியென்றோர்தமக்குச் ... *
சொல்லறியாவூமர்கள்போற்சொல்லுநாளெந்நாளோ... ௪
அண்டாண்டகோடியனைத்துமுகாந்தவெள்ளங் ... ... *
கொண்டதெனப்பேரின்பங்கூடுநாளெந்நாளோ ... ௫
ஆதியந்தமில்லாதவாதியனாதியெனுஞ்... ... ... *
சோதியின்பத்தூடேதுளையுநாளெந்நாளோ ... ௬
சாலோகமாதிசவுக்கியமும்விட்டப்பான் ... ... *
மேலானஞானவின்பமேவுநாளெந்நாளோ... ... ... ௭
தற்பரத்தினுள்ளேயுஞ்சாலோகமாதியெனும்... ... ... *
பொற்பறிந்தானந்தம்பொருந்துநாளெந்நாளோ... ... ௮
உள்ளத்தினுள்ளேதானூறுஞ்சிவானந்த ... ... *
வெள்ளந்துளைந்துவிடாய்தீர்வதெந்நாளோ ... ... ௯
கன்னலுடன்முக்கனியுங்கற்கண்டுஞ்சீனியுமாய் ... *
மன்னுமின்பவாரமுதைவாய்மடுப்பதெந்நாளோ... ... ௰
மண்ணூடுழன்றமயக்கமெல்லாந்தீர்ந்திடவும் ... ... *
விண்ணூடெழுந்தசுகமேவுநாளெந்நாளோ... ... ... ௰௧
கானற்சலம்போன்றகட்டுழலைப்பொய்தீர ... ... *
வானமுதவாவிமருவுநாளெந்நாளோ ... ... ௰௨
தீங்கருப்பென்றலினியாதின்றலினிப்பனபோற் ... *
பாங்குறும்பேரின்பம்படைக்குநாளெந்நாளோ... ... ௰௩

புண்ணியபாவங்கள்பொருந்தாமெய்யென்பதெல்லா... ... *
நண்ணியபேரின்பசுகநாமணுவதெந்நாளோ ... ௰௪

முற்றிற்று - ௮ ௲௨௨௭.

— * —

## அன்புநிலைமை.

தக்கரவிகண்டசரோருகம்போலெல்லிதய ... *
மிக்கவருள்கண்டுவிகசிப்பதெந்நாளோ ... ... ௧
வானமுகில்கண்டமயூரபட்சிபோலவயன்... ... ... *
ஞானநடங்கண்டுநடிக்குநாளெந்நாளோ ... ... ௨
சந்திரனைநாடுஞ்சகோரபட்சிபோலறிவில் ... ... *
வந்தபரஞ்சோதியையாம்வாஞ்சிப்பதெந்நாளோ ... ௩
குத்திரமெய்ப்புற்றகத்துக்குண்டலிப்பாம்பொன்றுட்டுஞ் *
சித்தியையென்கண்ணுற்றெரிசிப்பதெந்நாளோ ... ... ௪
அந்தரத்தேநிற்கும்மானந்தக்கூத்தனுக்கென் ... ... *
சிந்தைதிறைகொடுத்துச்சேவிப்பதெந்நாளோ ... ... ௫
கள்ளனிவனென்றுமெள்ளக்கைவிடுதல்காரியமோ... ... *
வள்ளலேயென்றுவருந்துநாளெந்நாளோ ... ... ௬
விண்ணூடர்காணுவிமலாபரஞ்சோதி... .. ... .. *
யண்ணாவாவென்றரற்றுநாளெந்நாளோ ... ... ௭
ஏதேதுசெய்தாலுமென்பணிபோதிற்பணியா ... *
மாதேவாவென்றுவருந்துநாளெந்நாளோ ... ... ௮
பண்டுங்காணேனுன்பழம்பொருளேயின்றுனைக்... ... *
கண்டுங்காணேனெனவுங்கைகுவிப்பதெந்நாளோ ... ௯
பொங்கேதமானபுழுக்கமெல்லாந்தீரவிப்ப ... ... *
மெங்கேயெங்கேயென்றிரங்குநாளெந்நாளோ ... ...௰
கடலின்மலடகண்டதுபோற்கண்ணீராக ... ... *
வுடல்வெதும்பிமூர்ச்சித்துருகுநாளெந்நாளோ ... ௰௧
புலர்ந்தேன்முகஞ்சருகாய்ப்போனேனிற்காண ... ... *
வலந்தேனென்றேங்கியழுங்குநாளெந்நாளோ ... ...௰௨
புண்ணீர்மையாளர்புலம்புமாபோற்புலம்பிக்... ... *
கண்ணீருங்கம்பலையுங்காட்டுநாளெந்நாளோ ... ... ௰௩
போற்றேனென்றாலுமென்னைப்பத்திசெய்யும்வேதனைக்கிங் *
காற்றேனாற்றேனென்றரற்றுநாளெந்நாளோ ... ௰௪
பொய்முடங்கும்பூமிசிலபோட்டலறப்பூங்கமலன் ... *
கைமுடங்கநால்சனனக்கட்டறுவதெந்நாளோ ... ௰௫
கற்குணத்தைப்போன்றவஞ்சக்காரர்கள்கைகோவாம ... *
நற்குணத்தார்கைகோத்துநான்றிரிவதெந்நாளோ ... ௰௬

ஒட்டனமாமாயைச்சுழலிக்கியந்தரமே ... ... *
விட்டனையோவென்றுவியக்குநாளெந்நாளோ ... ௰௭

முற்றிற்று-ஆ ௧௨௪௪.

## அன்பர்நெறி.

ஆத்துவாவெல்லாமடங்கச்சோதித்தபடிச் ... ... *
சித்துருவாய்நின்றோர்தெளிவறிவதெந்நாளோ ... ௧
மூச்சற்றுச்சிந்தைமுயற்சியற்றுமூதறிவாய்ப் ... *
பேச்சற்றோர்பெற்றவொன்றைப்பெற்றிடுநாளெந்நாளோ ௨
கோட்டாலையானகுணமிறந்துநிர்க்குணத்தோர் ... *
தேட்டாலேதேடுபொருள்சேருநாளெந்நாளோ ... ௩
கேடுதேபசுத்துவத்தைக்கேடிலாவானந்த ... *
மடுத்தோரடுத்தபொருட்கார்வம்வைப்பதெந்நாளோ ௪
கற்கண்டாலோடுகின்றகாக்கைபோற்பொய்ப்பாயச் ... *
சொற்கண்டாலோடுமன்பர்தோய்வறிவதெந்நாளோ ௫
மெய்த்தகுலங்கள்விடுனைகூடமெல்லாமோடவிட்ட ... *
சித்தரொன்றுஞ்சோராச்செயலறிவதெந்நாளோ ... ௬
குற்றச்சமயக்குறும்படர்ந்துநற்போத ... ...*
மற்றவர்கட்கற்றபொருட்கன்புவைப்பதெந்நாளோ ... ௭
தர்க்கமிட்டுப்பாழாஞ்சமயக்குதர்க்கமிட்டு ... *
நிற்குமவர்கண்டவழிநேர்படுவதெந்நாளோ ... ௮
விரியவேதாந்தமுதன்மிக்ககலாந்தவரை ... *
யாறுமுணர்ந்தோருணர்வுக்கன்புவைப்பதெந்நாளோ ௯
கண்டவிடமெல்லாங்கடவுண்மயமென்றறிந்து ... ... *
கொண்டநெஞ்சர்நேயநெஞ்சிற்கொண்டிருப்பதெந்நாளோ ௰
பாக்கியங்களெல்லாம்பழுத்துமனம்பழுத்தோர் ... *
நோக்குந்திருக்கூத்தைநோக்குநாளெந்நாளோ ... ௰௧
எவ்வுயிருந்தன்னுயிர்போலெண்ணுந்தபோதனர்கள் ... *
செவ்வடியைநாடிமிகச்சிந்தைவைப்பதெந்நாளோ ... ௰௨

முற்றிற்று-ஆ ௧௨௫௬.

---

## அறிஞருரை.

இருநிலனாய்த்தீயாகியென்றதிருப்பாட்டின் ... *
பெருநிலையைக்கண்டனைந்துபேச்சறுவதெந்நாளோ ... ௧
அற்றவர்கட்கற்றசிவனுமென்றவத்துவித ... ... *
முற்றமொழிகண்டருளின்மூழ்குநாளெந்நாளோ ... ௨
தானெனைமுன்படைத்தானென்றதகவுரையை ... *
நானென்றுவுண்மைபெற்றுநாமுணர்வதெந்நாளோ ... ௩

என்னுடையதோழனுமாயென்றதிருப்பாட்டி ... *
னன்னெறியைக்கண்டுரிமைநாஞ்செய்வதெந்நாளோ ... (௪)
ஆருடனேசேருமறிவென்றவவ்வுரையைத் ... ... *
தேரும்படிக்கருடான்சேருநாளெந்நாளோ ... ... (௫)
உன்னிலுன்னுமென்றவுறுமொழியாலென்னிதயந் ... *
தன்னிலுன்னிதன்னெறியைச்சாருநாளெந்நாளோ ... (௬)
நினைப்பறவேதாணினைந்தேனென்றநிலைநாடி ... *
யனைத்துமாமப்பொருளிலாழுநாளெந்நாளோ ... (௭)
சென்றுசென்றேயணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாகி ... *
நின்றுவிடுமென்றநெறிநிற்குநாளெந்நாளோ ... ... (௮)
ஆதியந்தமில்லாவரியபரஞ்சோதி ... ... ... *
நீதிமொழிகண்டதுவாய்நிற்குநாளெந்நாளோ ... (௯)
பிறிதொன்றிலாசையின்றிப்பெற்றிருந்தேனென்ற ... *
நெறியுடையான்சொல்லிநிலைநிற்குநாளெந்நாளோ ... (௰)
திரையற்றநீர்போற்றெளியவெனத்தேர்ந்த ... ... *
வுரைபற்றியுற்றங்கொடுங்குநாளெந்நாளோ ... (௰௧)
அறியாவறிவிலவிழ்ந்தேறவென்ற ... ... *
நெறியாமுறையுணர்ந்துநிற்குநாளெந்நாளோ ... (௰௨)
எனக்குனியென்றுமியற்கையாமின்னு ... ... *
முனக்குணனென்றவுறுதிகொள்வதெந்நாளோ ... (௰௩)
அறிவையறிவதுவேயாகும்பொருளென் ... ... *
றுறுதிசொன்னவுண்மையினையோருநாளெந்நாளோ (௰௪)

முற்றிற்று-ஆ. ௧௨௭௰.

# நிற்குநிலை.

பண்ணினிசைபோலப்பரமன்பானின்றதிர ... ... *
னெண்ணியருளாகியிருக்குநாளெந்நாளோ ... (௧)
அறிவோடறியாமையற்றறிவினூடே ... ... *
குறியிலறிவுவந்துகூடுநாளெந்நாளோ ... ... (௨)
சொல்லான்மனத்தாற்றொடராச்சம்பூரணத்தி ... *
னில்லாநிலையாய்நிலைநிற்பதெந்நாளோ ... ... (௩)
செங்கதிரின்முன்மதியந்தேசடங்கிநின்றிடல்போ ... *
லங்கணனார்தாளிலடங்குநாளெந்நாளோ ... (௪)
வானூடடங்கும்வளிபோலவின்புருவாங் ... ... *
கோனூடடங்குங்குறிப்பறிவதெந்நாளோ ... (௫)
செப்பரியதன்கருணைச்சிற்சுகனார்பூரணத்தி ... ... *
லப்பினிடையுப்பாயணையுநாளெந்நாளோ ... (௬)
தூயவறிவானசுகரூபசோதிதன்பாற் ... ... *
றீயினிரும்பென்னத்திகழுநாளெந்நாளோ ... (௭)

தீதணையாக்கர்ப்பூரதீபமென நாணகண்ட ... ... *
சோதியுடனொன்றித்துரிசறுவதெந்நாளோ ... (௮)
ஆராருங்காணாதவற்புதனார்பொற்படிக்கீழ் ... ... *
நீரார்நிழல்போணிலாவுநாளெந்நாளோ ... ...(௯)
எட்டத்தொலையாதவெந்தைபிரான்சன்னிதியிற் ... *
பட்டப்பகல்விளக்காய்ப்பண்புறுவதெந்நாளோ ...(௰)
கருப்புவட்டைவாய்மடுத்துக்கண்டார்நாய்போல ... *
விருப்புவட்டாவின்புருவைமேவுநாளெந்நாளோ - (௰௧)
துச்சப்புலனாற்சுழலாமற்றன்னருளா ... ... *
லுச்சிக்கதிர்ப்படிகமொவ்வுநாளெந்நாளோ ... (௰௨)
இம்மாநிலத்திலிருந்தபடியேயிருந்து ... ... *
சும்மாவருளைத்தொடருநாளெந்நாளோ ... (௰௩)
தானவனுந்தன்மையெய்தித்தண்டமெனவண்டமெங்கு ... *
ஞானமதயானைநடத்துநாளெந்நாளோ ... ... (௰௪)
ஒன்றிரண்டுமில்லதுவாயொன்றிரண்டுமுள்ளதுவாய் ... *
நின்றசமத்துநிலைநேர்பெறுவதெந்நாளோ ... (௰௫)
பாசமகலாமற்பதியிற்கலவாமன் ... ... *
மாசில்சமத்துமுத்திவாய்க்குநாளெந்நாளோ ...(௰௬)
சிற்றறிவுமெள்ளச்சிதைந்தெம்மான்பேரறிவை ... *
யுற்றறியாவண்ணமறிந்தோங்குநாளெந்நாளோ ... (௰௭)
தந்திரத்தைமந்திரத்தைச்சாரினவையாமறிவென் ... *
றெந்தையுணர்வேவடிவாவெய்துநாளெந்நாளோ ... (௰௮)
போக்குவரவற்றவெளிபோனிறைந்தபோதநிலை ... *
நீக்கமறக்கூடிநினைப்பறுவதெந்நாளோ ... (௰௯)
காண்பானுங்காட்டுவதுங்காட்சியுமாநின்றவந்த ... *
வீண்பாவம்போயதுவாய்மேவுநாளெந்நாளோ ... (௨௰)
வாடாதேநாணாவாய்மாயாதேயெங்கோவை ... *
நாடாதேநாடிநலம்பெறுவதெந்நாளோ ... (௨௰௧)
ஆடலையேகாட்டியெமதாடலொழித்தாண்டான்பொற் ... *
றாடலைமேற்சூடித்தழைக்குநாளெந்நாளோ ... (௨௰௨)
மேலொடுகீழில்லாதவித்தகனார்தம்முடனே ... *
பாலொடுநீர்போற்கலந்துபண்புறுவதெந்நாளோ ... (௨௰௩)
அறியாதறிந்தெமையாளண்ணலைநாமாகக் ... *
குறியாதவண்ணங்குறிக்குநாளெந்நாளோ ... (௨௰௪)
ஓராமன்மந்திரமுமுன்னுமனம்பரனைப் ... ... *
பாராமற்பார்த்துப்பழகுநாளெந்நாளோ ... (௨௰௫)
ஊன்பற்றுமென்னோடுறவுபற்றும்பூரணன்பால் ... *
வான்பற்றுங்கண்போன்மருவுநாளெந்நாளோ ... (௨௰௬)

ஆண்டான்மவுனியளித்தவறிவாலறிவைத் ... ... *
தாண்டாமற்றாண்டித்துலங்குநாளெந்நாளோ ... (௨௭)
ஆணவத்தோடத்துவிதமானபடிமெய்ஞ்ஞானத் ... *
தாணுவினோடத்துவிதஞ்சாருநாளெந்நாளோ ... (௨௮)

முற்றிற்று-ஆ௳ ௩௨௬௮.

## நிலையிரிந்தோர்கூடுதற்குபாயம்.

கன்மநெறிதப்பிற்கடுநரகென்றெந்நாளு ... ...*
நன்மைதருஞானநெறிநாமணைவதெந்நாளோ ... (௧)
ஞானநெறிதானேநழுவிடினுமுப்பதத்து ... *
ஈனமுத்திநல்குமெனவன்புறுவதெந்நாளோ ... (௨)
பன்மார்க்கமானபலவடிபட்டேனுமொரு ... ...*
சொன்மார்க்கங்கண்டுதுலங்குநாளெந்நாளோ ... (௩)
அத்துவிதமென்றவன்னியச்சொற்கண்டுணர்ந்து ... *
சுத்தசிவத்தைத்தொடருநாளெந்நாளோ ... ... (௪)
கேட்டன்புதஞன்காமலேகேடிலாநாற்பதமும் ... *
வாட்டமறவெமக்குவாய்க்குநாளெந்நாளோ ... (௫)
என்னதியானெல்பதறவெவ்விடமுமென்றுசான் ... *
சன்னிதியாக்கண்டுநிட்டைசாதிப்பதெந்நாளோ ... (௬)
நாம்பிரமமென்றுணடுவேயொன்றுண்டாமா... ... *
றேம்பியெல்லாமொன்றாய்த்திகழுநாளெந்நாளோ .. (௭)
முச்சகமேயாதிமுழுதுமகண்டாகார ... ... *
சச்சிதானந்தசிவந்தானென்பதெந்நாளோ ... (௮)
எவ்வடிவும்பூரணமாமெந்தையுருவென்றிசைந்த ... *
வவ்வடிவுக்குள்ளேயடங்குநாளெந்நாளோ ... (௯)
சிந்தித்ததெல்லாஞ்சிவபூரணமாக ... ... *
வந்தித்துவாழ்த்திவணங்குநாளெந்நாளோ ... (௰)
தாங்கியபார்வின்றுதிதானேஞானுக்கினியா ... *
யோங்குமியோகவுணர்வுற்றிடுநாளெந்நாளோ ... (௰௧)
ஆசனமூர்த்தங்களறவகண்டாகாரசிவ ... ...*
பூசைசெயவாசைபொருந்துநாளெந்நாளோ ... (௰௨)
அஞ்செழுத்தினுண்மையதுவானவப்பொருளை ... ...*
நெஞ்சமுத்தியொன்றாகிநிற்குநாளெந்நாளோ ... (௰௩)
அவ்வுயிர்போலெவ்வுயிருமானபிரான்றன்னடிமை ... *
யெவ்வுயிருமென்றுபணியாஞ்செய்வதெந்நாளோ... ...(௰௪)
தேசிகர்கோனானதிறன்மவுனிநந்தமக்கு ... *
வாசிகொடுக்கமகிழுநாளெந்நாளோ ... ... (௰௫)
குருலிங்கசங்கமமாக்கொண்டதிருமேனி ... *
யருண்மயமென்றன்புற்றருள்பெறுவதெந்நாளோ ... (௰௬)

எந்நாட்கண்ணி-முற்றிற்று-ஆ௳ ௩௬௱௰௪.

# காண்பேனோவென்கண்ணி.

சிந்திக்குந்தோறுந்தெவிட்டாவமுதேயென் ... *
புந்திக்குணீதான்பொருந்திடவுங்காண்பேனோ ... (௧)
கேவலத்தினுன்கிடந்துகீழ்ப்படாதின்பவருட் ... *
காவலன்பாலொன்றிக்கலந்திடவுங்காண்பேனோ ... (௨)
துரியங்கடந்தவொன்றேதூவெளியாய்நின்ற ... *
பெரியவிறைவேயுனைநான்பெற்றிடவுங்காண்பேனோ (௩)
மாசற்றவன்பர்நெஞ்சேமாறுதபெட்டகமாத் ... *
தேசுத்தமாமணிநின்றேசினையுங்காண்பேனோ ... (௪)
மாயாவிகாரமலமகலவெந்தைபிரா ... *
னேயானுபூதிநிலைபெறவுங்காண்பேனோ ... (௫)
பொய்யுலகும்பொய்யுறவும்பொய்யுடலும்பொய்யெனவே *
மெய்யறிவைமெய்யெனவேமெய்யுடனேகாண்பேனோ (௬)
வாலற்றபட்டமெனமாயாமனப்படலங் ... *
காலற்றுவீழவுமுக்கண்ணுடையாய்காண்பேனோ ... (௭)
உள்ளும்புறம்புமொருபடித்தாய்நின்றசுகங் ... *
கொள்ளும்படிக்கிறைநீகூட்டிடவுங்காண்பேனோ ... (௮)
காட்டுகின்றமுக்கட்கரும்பேகனியேயென் ... ... *
னாட்டமெல்லாந்தீரவுனதாடலையுங்காண்பேனோ ... (௯)
தூங்காமற்றூங்கிச்சுகப்பெருமானின்னிறைவி ... *
னீங்காமனிற்குநிலைபெறவுங்காண்பேனோ ... (௰)
வாதவூராளிதனைவான்கருணையால்விழுங்கும் ... *
போதவூரேறேநின்பொன்னடியுங்காண்பேனோ ... (௰௧)
சாட்டையிலாப்பம்பரம்போலாடுஞ்சடசால ... *
நாட்டமறவெந்தைசுத்தஞானவெளிகாண்பேனோ ...(௰௨)
மன்றாடும்வாழ்வேமரகதஞ்சேர்மாணிக்கக் ... *
குன்றேநின்றாட்கீழ்க்குடிபெறவுங்காண்பேனோ ... (௰௩)
பொய்யென்றறிந்துமெமைப்போகவொட்டாதையவிந்த *
வையங்கனமயக்கமாற்றிடவுங்காண்பேனோ ... (௰௪)
தாயினும்நல்லதயாளுவேநின்னையுன்னித் ... *
தீயின்மெழுகொத்துருகுஞ்சிந்தைவரக்காண்பேனோ (௰௫)
என்செயினுமென்பெறினுமென்னிறைவாவேழையன்யா *
னின்செயலென்றுன்னுநினைவுவரக்காண்பேனோ ... (௰௬)
எள்ளத்தனையுமிரக்கமிலாவன்பாவி ... ... *
யுள்ளத்துமெந்தையுலாவிடவுங்காண்பேனோ ... (௰௭)
[illegible]ஞ்சகத்துக்காலயமாம்வல்வினையேனுகெடுமே ... *
னெஞ்சகத்திலையாநீநேர்பெறவுங்காண்பேனோ ... (௰௮)
தொல்லைப்பிறவித்துயர்கெடவுமெந்தைபிரான் ... *
மல்லற்கருணைவழங்கிடவுங்காண்பேனோ ... (௰௯)

வாளாருங்கண்ணார்மயற்கடலிலாழ்ந்தேன்சற் ... *
றுளாகவெந்தையருள்செயவுங்காண்பேனோ ... (௨௰)
பஞ்சாய்ப்பறக்குநெஞ்சப்பாவியைநீகூவியையா ... *
வஞ்சாதேயென்றின்னருள்செயவுங்காண்பேனோ ... (௨௧)
ஆடுகறங்காகியலமந்துழன்றுமனம் ... ... *
வாடுமெனையையாநீவாவெனவுங்காண்பேனோ ... (௨௨)
சிட்டர்க்கெளியசிவனேயோதீவினையேன் ... *
மட்டற்றவாசைமயக்கறவுங்காண்பேனோ ... (௨௩)
உண்ணின்றுணர்த்துமுலப்பிலாவொன்றேநின் ... *
றண்ணென்றசாந்தவருள்சார்ந்திடவுங்காண்பேனோ (௨௪)
ஓடுங்கருத்தொடுங்கவுள்ளுணர்வுதோன்றநினைக் ... *
கூடும்படிக்கிறைநீகூட்டிடவுங்காண்பேனோ ... ...(௨௫)
வாக்கான்மனத்தான்மதிப்பரியாய்நின்னருளை ... *
நோக்காமனோக்கிநிற்குநுண்ணறிவுகாண்பேனோ ... (௨௬)
இவ்வுடம்புநீங்குமுனேயெந்தாய்கேளின்னருளா ... *
மவ்வுடம்புக்குள்ளேயவதரிக்கக்காண்பேனோ ... (௨௭)
நித்தமாயொன்றாய்நிரஞ்சனமாய்நிற்குணமாஞ் ... *
சுத்தவெளிநீவெளியாய்த்தோன்றிடவுங்காண்பேனோ (௨௮)
கண்ணிறைந்தமோனக்கருத்தேயென்கண்ணேயென் ... *
னுண்ணிறைந்தமாயையொழிந்திடவுங்காண்பேனோ (௨௯)
அத்தாவிமலாவருளாளாவானந்த ... *
சித்தாவெனக்குனருள்செய்திடவுங்காண்பேனோ ... (௩௰)
வீணேபிறந்திறந்துவேசற்றேனாசையறக் ... *
காணேநிறைநின்கருணைபெறக்காண்பேனோ ... (௩௧)
சட்டையொத்தவிவ்வுடலைத்தள்ளுமுன்னேநான்சகச ... *
நிட்டையைப்பெற்றையாநிருவிகற்பங்காண்பேனோ (௩௨)
எல்லாந்தெரியுமிறைவாவென்னல்லலெல்லாஞ் ... *
சொல்லாமுநீதான்றெருத்திரங்கக்காண்பேனோ ... (௩௩)
அண்டபகிரண்டமனைத்துமொருபடித்தாக் ... *
கண்டவர்கள்கண்டதிருக்காட்சியையுங்காண்பேனோ .. (௩௪)
ஊனிருந்தகாயமுடனிருப்பவெந்தைநின்பால் ... *
வானிருந்ததென்னவுநான்வந்திருக்கக்காண்பேனோ ... (௩௫)
தினையத்தனையுந்தெளியறியாப்பாவியே ... .. *
னினைவிற்பரம்பொருணீநேர்பெறவுங்காண்பேனோ (௩௬)
துன்பமெனுந்திட்டனைத்துஞ்சூறையிடவையாவே ... *
யின்பவெள்ளம்வந்துநிங் கெதிர்ப்படவுங்காண்பேனோ (௩௭)

காண்பேனோவென்கண்ணி - முற்றிற்று - ஆக ௧௫௧.



# ஆகாதோவென்கண்ணி.



கல்லாதநெஞ்சங்கரைந்துருகவெத்தொழிற்கும் ... *
வல்லாய்நின்னின்பம்வழங்கினாலாகாதோ ... ...(க)
என்னையறியவெனக்கறிவாய்நின்றருணின் ... *
றன்னையறிந்தின்பநலஞ்சாரவைத்தாலாகாதோ ... (உ)
பொய்ம்மையமேயானபுரைதீரவெந்தையின்ப ... *
மெய்ம்மையம்வந்தென்னைவிழுங்கவைத்தாலாகாதோ (ஙு)
மட்டிலாச்சிற்சுகமாம்வாழ்வேநின்னின்பமயஞ் ... *
சிட்டர்போல்யானருந்தித்தேக்கவைத்தாலாகாதோ... (ச)
அத்தாநின்பொற்றுளடிக்கேயனுதினமும் ... ... *
பித்தாக்கியின்பம்பெருகவைத்தாலாகாதோ ... (ரு)
மெல்லியலார்மோகவிழற்கிறைப்பேனையாநின் ... *
னெல்லையிலானந்தநலமிச்சித்தாலாகாதோ ... (சு)
சுட்டழகாயெண்ணுமனஞ்சூறையிட்டானந்தமயக் ... *
கட்டழகாநின்னைக்கலக்கவைத்தாலாகாதோ ... (எ)
சோதியேநந்தாச்சுகவடிவேதூவெளியே ... ...*
யாதியேநின்னையறியவைத்தாலாகாதோ... ... (அ)
நேசஞ்சிறிதுமிலேனின்மலனேநின்னடிக்கே ... *
வாசஞ்செயவிரங்கிவாவென்றாலாகாதோ ... (கூ)
என்னறிவுக்குள்ளேயிருந்ததுபோலையாவே ... *
நின்னறிவுணின்னுடன்யானிற்கவைத்தாலாகாதோ ... (ய)
ஆதிப்பிரானேயென்னல்லலிருளகலச் ... ... *
சோதிப்ரகாசமயந்தோன்றுவித்தாலாகாதோ ... (யக)
ஆசைச்சுழற்கடலிலாழாமலையாநின் ... ... *
னேசப்புணைத்தாணிறுத்தினாலாகாதோ ... ...(யஉ)
பாசனிகளங்களெல்லாம்பஞ்சாகச்செஞ்சேவே ... *
யீசவென்னவாவென்றிரங்கினாலாகாதோ ... ... (யஙு)
ஓயாவுள்ளன்பாயுருகிவாய்விட்டரற்றிச் ... ... ...*
சேயாகியெந்தைநின்னைச்சேரவைத்தாலாகாதோ ... (யச)
ஆதியாம்வாழ்வாயகண்டிதமாய்நின்றபரஞ் ... *
சோதிநீயென்னைத்தொழும்பனென்றாலாகாதோ... ... (யரு)
விண்ணூரக்கண்டவிழிபோற்பரஞ்சோதி... ... *
கண்ணூரநின்னிறைவைக்காணவைத்தாலாகாதோ ... (யசு)
சேராமற்சேர்த்துநின்றுகின்மயனே நின்மயத்தைப் ... *
பாராமற்பாரெனநீபக்ஷம்வைத்தாலாகாதோ ... (யஎ)
கண்ணாடிபோலவெல்லாங்காட்டுந்திருவருளை ... *
யுண்ணாடியையாவுருகவைத்தாலாகாதோ ... (யஅ)
மூலவிருள்கால்வாங்கமூதறிவுதோன்றவருட் ... *
கோலவெளியாகவெந்தைகூடுவித்தாலாக[illegible]... ...(யகூ)

சாற்றரியவின்பவெள்ளந் தாக்குமதினீமுழுக்கி ... *
ஆற்றமுறுமென்னவதிலுண்மைசொன்னாலாகாதோ... (௨௰)
கையுங்குவித்திரண்டுகண்ணருவிபெய்யவரு ... *
ளையநின்றாட்கீழேயடிமைநின்றாலாகாதோ... ... (௨௧)

ஆகாதோவென்கண்ணி-முற்றிற்று-ஆக ௲௱௭௨.

---

## இல்லையோவென்கண்ணி.

ஏதுந்தெரியாதெனைமறைத்தவல்லிருளை ... ... *
நாதநீக்கவொருஞானவிளக்கில்லையோ .. ... (௧)
பணியற்றுநின்றுபதைப்பறவென்கண்ணுள் ... ... *
மணியொத்தசோதியின்பவாரியெனக்கில்லையோ ...(௨)
எம்மாலறிவதறவெம்பெருமான்யாதுமின்றிச் ... *
சும்மாவிருக்கவொருசூத்திரந்தானில்லையோ ... ...(௩)
நாய்க்குங்கடையானேநாதாநின்னின்பமயம் ... *
வாய்க்கும்படியினியோர்மந்திரந்தானில்லையோ ...(௪)
ஊனாகநிற்குமுணர்வைமறந்தையாநீ ... ...*
தானாகநிற்கவொருதந்திரதானில்லையோ... ... (௫)
அல்லும்பகலுமகண்டவடிவேயுனைநான் ... ...*
புல்லும்படியெனக்கோர்போதனைதானில்லையோ ... (௬)

இல்லையோவென்கண்ணி-முற்றிற்று-ஆக ௲௱௭௮.

---

## வேண்டாவோவென்கண்ணி.

கண்டவடிவெல்லாநின்காட்சியென்றேகைகுவித்துப் ...*
பண்டுமின்றுநின்றவென்னைப்பார்த்திரங்கவேண்டாவோ... (௧)
வாதனையோடாடுமனப்பாம்புமாயவொரு ... ...*
போதனைதந்தையாபுலப்படுத்தவேண்டாவோ ... (௨)
தன்னையறியத்தனியறிவாய்நின்றருளு ... ... *
நின்னையறிந்தென்னறிவைநீங்கிநிற்கவேண்டாவோ ... (௩)
அள்ளக்குறையாவகண்டிதானந்தமெனும்... ... *
வெள்ளமெனக்கையாவெளிப்படுத்தவேண்டாவோ ... (௪)
அண்டனேயண்டரமுதேயென்னாருயிரா ... ...*
தொண்டனேற்கின்பந்தொகுத்திரங்கவேண்டாவோ (௫)
பாராதேநின்றுப[illegible]ாதேசும்மாதான் .. ... *
வாராயெனவ[illegible]டவேண்டாவோ... ... (௬)

வேண்டா[illegible]ன்கண்ணி-முற்றிற்று-ஆக ௲௱௮௪.

# நல்லறிவேயென் கண்ணி.

எண்ணிறைந்தமென்மைபடைத்தெவ்வுயிர்க்குமவ்வுயிராய்க் ... *
கண்ணிறைந்தசோதியைநாங்காணவாநல்லறிவே ... (க)
சித்தானநாமென்சடத்தைநாமென்னவென்றுஞ் ... *
சத்தானவுண்மைதனைச்சாரவாநல்லறிவே ... (உ)
அங்குமிங்குமெங்குநிறையற்புதனார்பொற்பறிந்து ... *
பங்கயத்துள்வண்டாய்ப்பயன்பெறவாநல்லறிவே ... (ங)
சான்றசோறென்னவிந்தக்காசினிவாழ்வத்தனையுந் ... *
தோன்றவருள்வெளியிற்றோன்றவாநல்லறிவே ... (ச)

நல்லறிவேயென்கண்ணி - முற்றிற்று ஆ. கூஅஅ.

## பலவகைக்கண்ணி.

என்னரசேகேட்டிலையோவென்செயலோவேதுமிலை ... *
தன்னரசுநாடாகித்தத்துவங்கூத்தாடியதே ... (க)
பண்டொருகானின்பாற்பழக்கமுண்டோவெந்தைநினைக் ... *
கண்டொருகாற்போற்றக்கருத்துங்கருதியதே ... (உ)
(வேறு.) கண்டனவேகாணுமன்றிக்காணுவோகாணுவென் ... *
கொண்டறிவேனெந்தைநினைக்கூடுங்குறிப்பினைமெய்ய ... (ங)
கல்லாலடியில்வளர்கற்பகமேயென்னளவோ ... *
பொல்லாவினைக்குப்பொருத்தந்தான்சொல்லாயே ... (ச)
தப்பிதமொன்றின்றியதுதானாகநிற்கவுண்மை ... ... *
செப்பியதுமல்லாலென்சென்னியதுதொட்டனையே ... (ரு)
(வேறு) மாசானநெஞ்சனிவன்வஞ்சனென்றோவாய்திறந்து *
பேசாமௌனம்பெருமான்படைத்ததுவே ... ... (சா)
கற்பதெல்லாங்கற்றேமுக்கண்ணுடையாய்நின்பணியாய் ... *
நிற்பதுகற்றன்றோநிருவிகற்பமாவதுவே ... (எ)
முன்னளவில்கன்மமுயன்றானிவனென்றோ ... ... *
வென்னளவிலெந்தாயிரங்காதிருந்ததுவே ... (அ)
(வேறு.) நெஞ்சகம்வேறாகிநினைக்கூடவெண்ணுகின்ற ... *
வஞ்சகனுக்கின்பமெந்தாய்வாய்க்குமாறெவ்வாறே (கூ)
(வேறு.) பள்ளங்கடோறும்பரந்தபுனல்போலுலகி ... *
லுள்ளம்பரந்தாலுடையாயென்செய்வேனே ... (ய)
முன்னினைக்கப்பின்மறைக்குமூடவிருளாகெடுவே ... *
னென்னினைக்கவென்மறக்கவெந்தைபெருமானே ... (யக)
வல்லாளாமோனாநின்வான்கருணையென்னிடத்தே ... *
யில்லாதேபோனாலெவ்வண்ணமுய்வேனே ... (யஉ)
(வேறு.) வாக்குமனமுமவுனமுறவெந்தைநின்னை ... *
நோக்குமவுனமிந்தநூலறிவிலுண்டாமோ ... (யங)
ஒன்றாய்ப்பலவாயுலகமெங்குந்தானேயாய் ... ... *
நின்றாயையாவெனைநீநீங்கற்கெளிதாமோ ... (யச)

# பாடுகின்றபணுவல்.

பாடுகின்றபணுவலோர்க - டேடுகின்றசெல்வமே ... *
நாடுகின்றஞானமன்றி - லாடுகின்றவழகனே ... (௧)
அத்தனென்றநின்னையே - பத்திசெய்துபணுவலாற் ... *
பித்தனின்றும்பசவே - வைத்ததென்னவாரமே ... (௨)
சிந்தையன்புசேரவே - வந்துநின்னைநாடினேன் ... *
வந்துவந்துளின்பமே - தந்திரங்குதாணுவே ... (௩)
அண்டரண்டமியாவுந் - கொண்டுநிற்குமகோலமே ... *
தொண்டர்கண்டுசொரிகணீர் - கண்டநெஞ்சுகரையுமே ... (௪)
அன்னைபோலவருள்மிகுத்து - மன்றுஞானவரதனே .. *
யென்னையேயெனக்களித்த நின்னையானுநினைவனே ... (௫)

பாடுகின்றபணுவல்முற்றிற்று - ஆ௨ ௬சஉ௰.

---

# ஆனந்தக்களிப்பு.

சங்கர சங்கர சம்பு - சிவ- சங்கர சங்கர சங்கர சம்பு.

ஆதியநாதியுமாகி - எனக் - கானந்தமாயறி வாய்நின் றிலங்கு
ஞ், சோதிமௌனியாய்த் தோன்றி- அவன் - சொல்லாதவார்த்தை
யைச் சொன்னாண்டிதோழி- சங்கர ... ... (௧)

சொன்னசொல்லேதென்று சொல்வேன் - என்னைச் சூதாய்த்
தனிக்கவே சும்மா விருத்தி- முன்னிலையேதுமில்லாதே- சுக- முற்ற
ச்செய்தேயென்னைப் பற்றிக்கொண்டாண்டி- சங்கர ... (௨)

பற்றியபற்றறவுள்ளே- தன்னைப்-பற்றச்சொன்னான்பற்றிப்பா
ர்த்தவிடத்தே, பெற்றதையேதென்றுசொல்வோம் - சற்றும்-பே
சாதகாரியம்பேசினான்றோழி- சங்கர ... ... (௩)

பேசா விடும்பைகள் பேசிச்- சுற்றப்- பேயங்கமாகிப்பிதற்றி
த் திரிந்தேன், ஆசாபிசாசைத்துரத்தி- ஐய- னடியிணைக்கீழே யடக்
கிக்கொண்டாண்டி- சங்கர .. ... ... (௪)

அடக்கிப் புலனைப்பிரித்தே - அவ- னாகியமேனியி லன்பைவ
ளர்த்தேன்- மடக்கிக்கொண்டா னென்னைத் தன்னுட்-சற்றும்-வாய்
பேசா வண்ணமரபுஞ்செய்தாண்டி- சங்கர ... (௫)

மரயைக் கெடுத்தனன்கேட்டேன்- இத்தை- வாய்விட்டுச்சொ
ல்லிடின் வாழ்வெனக்கில்லை, கரவுபுருஷினுமல்லன்-என்னைக் காக்கு
ந்தலைமைக் கடவுள்காண் மின்னே- சங்கர ... (௬)

கடலின் மடைவிண்ட தென்ன- இரு-கண்ணானுமானந்தக்கண்
ணீர்சொரிய, உடலும் புளகித யாக- என- [illegible] நசவுபாயஞ்
செய்தாண்டி- சங்கர ... ... ... (௭)

உள்ளது மில்லது மாய் முன் - னுணர்வதுவாயுன் னு[illegible] டதெல்லாந், தள்ளெனச் சொல்லியென்னையன்-என்னைத்-தானாக்கிக் கொண்ட சமர்த்தைப்பார்தோழி- சங்கர ... (௮)

பாராதி பூதநீயல்லை- உன்னிப்- பாரிந்திரியங்கரணநீயல்லை,யாராயுணர்வுநீயென்றான்- ஐய-னன்பாயுரைத்தசொல் லானந்தந்தோழி-சங்கர ... ... ... ... ... (௯)

அன்பருக்கன்பான மெய்யன்- ஐய- னானந்தமோனனருட்குருநாதன், தன்பாதஞ்சென்னியில்வைத்தான்- என்னைத்-தானறிந்தேன்மனந் தானிறந்தேனே- சங்கர ... ... ... (௰)

இறப்பும் பிறப்பும் பொருந்த- எனக்-கெவ்வணம்வந்ததென்றெண்ணியான்பார்க்கின், மறப்புநினைப்புமாய்நின்ற- வஞ்ச-மாயாமனத்தால் வளர்ந்ததுதோழி- சங்கர ... ... (௰௧)

மனதே கல்லாலெனக்கன்றே- தெய்வ- மௌனகுருவாகிவந்துகைகாட்டி, எனதாம் பணியறமாற்றி - அவ-னின்னருள்வெள்ளத்திருத்திவைத்தாண்டி- சங்கர ... ... ... (௰௨)

அருளாலெவையும் பாரென்றான்- அத்தை - யறியாதேசுட்டியென் னறிவாலேபார்த்தேன், இருளான பொருள்கண்ட தல்லாற்-கண்ட- வென்னையுங்கண்டில னென்னேடிதோழி- சங்கர ... (௰௩)

என்னையுந் தன்னையும் வேறா- உள்ளத்- தெண்ணாத வண்ணமிரண்டறநிற்கச், சொன்னது மோவொருசொல்லே- அந்தச்- சொல்லால்விளைந்த சுகத்தையென்சொல்வேன்- சங்கர ... (௰௪)

விளையுஞ் சிவானந்த பூமி- அந்த- வெட்ட வெளிநண்ணித்துட்டவிருளாங், களையைக்களைந்துபின் பார்த்தேன்- ஐயன்-களையன்றிவேறொன்றுங் கண்டிலன்தோழி- சங்கர ... ... (௰௫)

கண்டார் நகைப்புயிர்வாழ்க்கை- இரு-கண்காணநீங்கவுங் கண்டோந்துயின்றான், கொண்டார்போற் போனாலும் போகும் - இதிற்- குணமேது நலமேதுகூறாய்நீதோழி- சங்கர ... (௰௬)

நலமேது மறியாதவென்னைச்- சுத்த- நாதாந்த மோனமாநாட்டந்தந்தேசஞ், சலமேதுமில்லாமலெல்லாம்-வல்லான்- றானாலென்றலைமீது தாக்கினான்தோழி- சங்கர ... ... (௰௭)

தாக்குநல்லானந்தசோதி- அணு- தன்னிற்சிறிய வெனைத்தன்னருளாற், போக்குவரவற்றிருக்குஞ் சுத்த-பூரணமாக்கினான் புதுமைகாண்மின்னே- சங்கர ... ... ... (௰௮)

ஆக்கி[illegible]ளித்[illegible]துடைக்குந்- தொழி- லத்தனைவைத்து மௌளத்தனை யே[illegible] த[illegible]கற நிற்குஞ் சமர்த்தன்- உள்ள- சாட்சியைச் சிந்திக்கத்தக்கது[illegible] சங்கர ... ... (௰௯)

சிந்தைபிறந்ததுமாங்கே- அந்தச் - சிந்தையிறந்து தெளிந்ததுமாங்கே, எந்தநிலைகளுமாங்கே- கண்ட-யான்றனிரண்டற்றிருந்தது மாங்கே-சங்கர ... ... (உ௰)

ஆங்கென்று மீங்கென்றுமுண்டோ- சச்சி- தானந்தசோதியகண்டவடிவாய், ஓங்கிநிறைந்ததுகண்டாற்- பின்னர்-ஒன்றென்றிரண்டென்றுரைத்திடலாமோ- சங்கர ... ... (உக)

என்றுமழியுமிக்காயம்-இத்தை-யேதுக்கு மெய்யென்றிருந்தீருலகீர், ஒன்றுமறியாதநீரோ - யம-னேலைவந்தாற்சொல்ல வுத்தரமுண்டோ-சங்கர ... ... ... (உஉ)

உண்டோநமைப்போலவஞ்சர் - மல-மூறித்ததும்பு முடலைமெய்யென்று,கொண்டோ பிழைப்பதிங்கைய்யா - அருட்-கோலத்தைமெய்யென்று கொள்ளவேண்டாமோ-சங்கர ... (உ௩)

வேண்டாம் விருப்பும் வெறுப்பும் - அந்த-வில்லங்கத்தாலே விளையுஞ்சனனம், ஆண்டானுரைத்தபடியே-சற்று- மசையாதிருந்துகொள் ளறிவாகிநெஞ்சே-சங்கர ... ... (உ௪)

அறிவாரு மில்லையோ வையோ - என்னை- யாரொன்றறியாதவங்கதேசத்தில், வறிதேகாமத்தீவிற்சிக்கி - உள்ள- வான்பொருடோர்க்கவோவந்தேனுன்றோழி-சங்கர ... ... (உ௫)

வந்த வரவைமறந்து-மிக்க - மாதர்பொன்பூமி மயக்கத்திலாழும், இந்தமயக்கையறுக்க- எனக்-கெந்தை மெய்ஞ்ஞானவெழில்வாள்கொடுத்தான்-சங்கர ... ... ... (உ௬)

வாளாருங்கண்ணியர் மோகம்-யம- வாதக்கனலைவளர்க்குமெய்யென்றே, வேளானவனுமெய்விட்டான்-என்னின்-மிக்கோர் துறக்கைவிதியன்றோதோழி-சங்கர ... ... (உ௭)

விதிக்கும் பிரபஞ்ச மெல்லாஞ் - சுத்த- வெயின்மஞ்சளெனவே வேதாகமங்கள், மதிக்குமதனைமதியார்-அவர்- மார்க்கந்துன்மார்க்கஞ்சன்மார்க்கமோமானே-சங்கர ... ... (உ௮)

துன்மார்க்கமாதர் மயக்கம்-மனத்- தூயர்க்குப்பற்றுதுசொன்னேன்ஜனகன், தன்மார்க்கநீதிதிட்டாந்தம்-அவன்-ஞானந்தமானசதானந்தனன்றோ-சங்கர ... ... ... ...(உ௯)

அன்றென்றுமாமென்று முண்டோ-உனக் - கானந்தம்வேண்டினறிவாகிச்சற்றே, நின்றாற் றெரியுமெனவே- மறை-நீதியெம்மாதிநிகம்க்கினன்றோழி சங்கரசங்கரசம்பு ... ... (௩௰)



ஆனந்தக்களிப்பு-முற்றுப்பெற்ற ... ...

## அகவல்.

திருவருண்ஞானஞ் சிறந்தருள்கொழிக்குங், குருவடிவாகக்கு றைவிலாநிறைவே, நின்றொன்றென்ற நின்மல வடிவே, குன்றாப் பொருளே குணப்பெருங்கடலே, ஆதியுமந்தமுமானந்தமயமாஞ் சோதியேசத்தே தொலைவிலாமுதலே, சீர்மலிதெய்வத் திருவருள ணைற், பார்முதலண்டப் பரப்பெலாநிறுவி, அண்டசமுதலாமெ ண்டருநால்வகை, எழுபிறவியிற் றுழாதோங்கும், அனந்தயோனி யினினம்பெறமல்க, அணுமுதலசல மானவாக்கையும், சணமுதல ன்விற் கற்பகாலமுங், கன்மப்பகுதித் தொன்மைக்கீடா, இமைப் பொழுதேனுந் தமக்கெனவறிவிலா, ஏழையுயிர்த்திரள் வாழவமை த்தனை, எவ்வுடலெடுத்தா ரவ்வுடல்வாழ்க்கை, இன்பமெனவே து ன்பமிலையெனப், பிரியாவண்ணம் முரிமையின்வளர்க்க, ஆதரவாக க்காதலுமமைத்திட், டேகமின்றியே தேகநானென, அறிவுபோலறி யாமையியக்கிக், காலமுங் கன்மமுங் கட்டுங் காட்டியே, மேலுநர கமுமேதகுசுவர்க்கமும், மாலற வகுத்தனை யேலும் வண்ணம், அ மையாக்காதலிற்சமயகோடி, அறம்பொருளாதிதிறம்படுநிலையிற், குருவாயுணர்த்தி யொருவர்போலனைவருந், தத்தநிலையேமுத்திமு டிவென, வாததர்க்கமும் போதநூல்களும், நிறைவிற்காட்டியே குறைவின்றிவயங்க, அங்கங்குநின்றனை யெங்குமாகிச், சமயாதீத த்தன்மையாகி, இமையோர்முதலிய யாவருமுனிவருந், தம்மை க்கொடுத்திட்டெம்மையாளென, ஏசற்றிருக்கமாசற்றஞான, நல முங் காட்டினை ஞானமிலேற்கு, நிலையுங் காட்டுத லின்னருட்க டனே ... ... ... ... ... *

அகவல்-முற்றுப்பெற்றது-அடி. கூசருக.



## வண்ணம்.

அருவென்பனவுமன்றி உருவென்பனவுமன்றி ... *
அகமும்புறமுமன்றிமுறைபிறழாது ... ... *
குறியுங்குணமுமன்றிநிறைவுங்குறைவுமன்றி ... *
மறையொன்றெனவிளம்பவிமலமதாகி ... ... *
அசலம்பெறவுயர்ந்துவிபுலம்பெறவளர்ந்து ... *
சபலஞ்சபலமென்றுளறிவினர்காண ... ... *
ஞானவெளியிடைமேவுமுயிராய் ... ... (௫)

அலையொன்று[illegible]வெரிப்புதுபுகைமண்டிடுவதன்று ... *
புனலொன்[illegible]கிழ்ந்துமடிவிலதாதை ... *

சருவும்பொழுதுயர்ந்துசலனம்படுமென்று ... *
சமர்கொண்டழிவதன்றோரியல்பினுமாகும் ... *
அவனென்பதுவுமன்றிஅவளென்பதுவுமன்றி ... *
அதுவென்பதுவுமன்றிஎழில்கொடிலாவும் ... *
அருநிலையறியாதபடியே ... ... (வ)

இருளென்பதுவுமன்றிஒளியென்பதுவுமன்றி ... *
எவையுந்தனுளடங்கஒருமுதலாகும் ... *
உளதென்பதுவுமன்றிஇலதென்பதுவுமன்றி ... *
உலகந்தொழவிருந்தவயன்முதலோர்கள் ... *
எவருங்கவலைகொண்டுசமயங்களில்விழுந்து... ... *
சுழலும்பொழுதிரங்கிஅருள்செயுமாறு ... *
கூறரியசுகமாயையறவே ... ... (வறு)

எனதென்பதையிகழ்ந்தஅறிவின்றிரளினின்று ... *
மறிவொன்றெனவிளங்குமுபயமதாக ... *
அறியுந்தரமுமன்றுபிறியுந்தரமுமன்று ... *
அசரஞ்சரமிரண்டிறனொருபடியாகி ... ... *
எதுசந்ததநிறைந்ததெதுசிந்தனையிறந்த ... *
தெதுமங்களசுபங்கொள்சுக்வடிவாகும் ... *
யாதுபரமதைநாடியறிநீ ... ... (௨)

பருவங்குலவுகின்றமடமங்கையர்தொடங்கு ... *
கபடந்தனில்விழுந்துகெடுநினைவாகி ... *
வலையின்புடைமறிந்தமறியென்றவசமுண்டு ... *
வசனந்திரமுமின்றிஅவரிதழூறல் ... ... *
பருகுந்தொழிலிணங்கியிரவும்பகலுமின்சொல் ... *
பகரும்படிதுணிந்துகுழலழகாக ... ... *
மாலைவகைபலசூடியுடனே ... ... (உறு)

ஏமந்தனையிசைந்தமுலையென்றதையுகந்து ... *
வரிவண்டெனவுழன்றுகலிலெனவாடுஞ் ... ... *
சிறுகிண்கிணிசிலம்புபுனைதண்டைகண்முழங்கும் .. *
ஒலிநன்றெனமகிழ்ந்துசெவிகொளநாகி ... *
பசுமஞ்சளின்வியந்தமணமுந்திடமுகந்து ... *
பவளஞ்சிடவிறைஞ்சிவரிசையினூடு ... *
காலின்மிசைமுடிசூடிமயலாய் ... ... (ஞ)

மருளுந்தெருளும்வந்துகதியென்பதைமறந்து ... *
மதனன்சலதியெ[illegible]கவிரணமதான .. ... *
அளிபுண்டனைவளைந்துவிரல்கொண்டுறவளைந்து ... *
சுரதஞ்சுகமிதென்றுபரவசமாகி ... ... *
மருவுந்தொழின்மிகுந்துதினமுந்தினமும்விஞ்சி ... ... *
வளரும்பிறைகுறைந்தபடிமதிசோர ... *
வானரமதெனமேனிதிரையாய் ... ... (ஒவறு)

வயதும்படவெழுந்துபிணியுந்திமிதிமென்று ... *
வரவுஞ்செயலழிந்துளிருமலுமாகி ... *
அணமுஞ்செலுதலின்றிவிழியுஞ்சுடர்களின்று ... *
மூகமுங்களைகளின்றுசரியெனநாடி ... *
மனையின்புறவிருந்தவினமுங்குலைகுலைந்து ... *
கலகஞ்செயவிருண்டயமன்வரும்வேளை ... *
எதுதுணைபழிகாரமனமே ... ... (க

வண்ணம் - முற்றுப்பெற்றது - ஆ தசருஉ.



# தாயுமானசுவாமிகள்பாடல்

முற்றுப்பெற்றது.



